




# ஐந்து இரகசியங்கள்

அருங்கலைக்கோன், ஸ்ரீசடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு, பொதுமறைச்
செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்









**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

# ஐந்து இரகசியங்கள்

அருங்கலைக்கோன், ஸ்ரீசடகோபன் பொன்னடி, சேவா இரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல்,கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

**பேராசிரியர் முனைவர்**

## ந சுப்பு ரெட்டியார்

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**
தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்




**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*






**First Edition: Aug 1977**
**Second Edition: Feb 2020**

Published by:
**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*
**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**

**IBSN:978-81-945046-0-3**




Wrapper design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

IYNDHU RAGASIYANGAL

*By*

Dr. N. Subbu Reddiar



T.T.D. Religious Publications Series No.

First Edition : 2007

Copies: 500

*Published by*
A.P.V.N. Sarma, I.A.S.,
Executive Officer
Tirumala Tirupati Devasthanams,
Tirupati - 517 501.

DTP Typeset: Adsprint, Chennai - 12.

*Printed at*
Tirumala Tirupati Devasthanams Press,
Tirupati - 517 507.



**Foreword**

Pillai Pogachariar is the author of Eighteen Rahasyas of Sri Vaishnavism which have been written in Sanskritised. Tamil which cannot be read and comprehended even by a Tamil Scholar Professor Dr. N. Subbu Reddiar former Founder-Professor and Head of the Department of Tamil of Sri Venkateswara University, Tirupathi has selected Five important rahasyas among them (Sixth, Seventh, Eighth, Nineth and Tenth) taken enormous pains to go through them and rendered them in simple readable. Tamil which can reach even to an ordinary lay Tamil reader who can easily read and enjoy the religious philosophy of Vaishnavism. The T.T. Devasthanam is very much happy to publish these Rahasyas for the benefits of even the lay public and offer its thanks to Professor Reddiar.

Executive Officer,

Date: *T.T.Devasthanam*

திருவேங்கடவன் திருமலையிலும்
அடியேனின் உள்ளத்திலும்
நிரந்தரமாக எழுந்தருளியிருக்கும்
வேங்கட ஒளிவிளக்கின்
இணைத்தாமரைத் திருவடிகளில்

## பக்திப் படையல்

வண்ணமார் திங்கள் கதிரவன் முதலாய்
மாண்புறும் ஒளியினில் விண்ணில்
மண்ணினில் கடலில் யோகிய ருளத்தில்
வதிதலால் பயனிலை யென்று
எண்ணிநெஞ் சுருகி யாவரும் நோக்கி
எழில்வியப் பெய்தவேங் கடத்தில்
நண்ணியெற் கருளும் மாதவ முகுந்தன்
நல்லடிக் குறியதிந் நூலே.



**K.K.A. Venkatachari, Ph.D.,**
Founder Director & Professor (Rtd.)
Ananthacharya Indological
Research Institute,
Mumbai.

Old No.104, New No.40
T.P. Koil Street,
Thiruvallikkeni,
Chennai - 600 005.
Phone: 284 40 361

# அணிந்துரை

பேராசிரியர் டாக்டர் என்.சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ் உலகத்தில் தமக்கென ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளவர் அவருடைய படைப்புகள் விஞ்ஞானம் சமயம், இலக்கியம் ஆகிய துறைகளில் எல்லோராலும் போற்றப்படுபவை. வைணவப் பெருந்தகை பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச் சாரியார் சுவாமியால் பாராட்டப் பெற்றவர். இப்பொழுது அவர் நமக்கு பிள்ளைலோகாச்சாரியயின் ஐந்து இரகசியங்களை தமக்கே உண்டான நடையில் எழுதியுள்ளார். எப்பொழுதுமே அவர் எழுதுவதற்கு முன்னர், அந்நூலைப்பற்றிய செய்தி களையும் அந்நூலுக்கு எளிய உரையும் எழுதுவது இயல்பு.

இப்பொழுது **பிரமேயசேகரம்** என்ற பிள்ளை லோகாச் சாரியாரின் ஆறாவது இரகசியத்தை எடுத்துக் கொண்டு அதன் செய்திகளை மிக சிறப்பாகக் கூறியுள்ளார். அடுத்து வரும் **பிரபந்த பரித்ராணம்** என்ற நூலைப் பற்றி எழுதுகிறார். சிறப்பாக சமய இலக்கியங்களில் வழங்கக் கூடிய சொற்களுக்கு விரிவுரை தருகின்றார். உதாரணத்திற்கு நான்காவது பக்கத்திலே ஔபாதிக பந்துக்கள் என்பதை மிக சுவைப்பட விவரித்துள்ளார். அடுத்து **சாரசங்கிரகம்** என்ற இரகசியத்தை விவரித்துக் கூறுகின்றார். முக்கியமாக இரகஸ்யத்தியத்தைக் கூறும் முறை மாறுபட்டு கூறப்படும் என்பதை எட்டாவது பக்கத்திலே சுட்டிக் காட்டுகிறார். இந்த சாரசங்கிரத்தில் த்வயம், சரமஸ்லோகம் இரண்டினுடைய உட்பொருளையும் ஈடு முதலிய பண்டைய சம்ப்ரதாய நூல் களையும் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

அடுத்து **சம்சார சாம்ராஜ்யம்** என்ற இரகசியத்தினையும் **நவரத்தினமாலை** என்ற இரகசியத்தினையும் விவரித்து எழுது கின்றார். இப்படி இந்த ஐந்து இரகசியங்களையும் சுருக்கமாகவும், அதே நேரத்தில் விளக்கமாகவும் எளிய நடையிலே கூறியுள்ளார். இவ்வாறு எழுதுவதில் பேராசிரியர் நன்கு அறிமுகமானவர்.

அவருடைய நூலுக்கு அவர் அணிந்துரை கேட்பது அவருடைய பெருமையையும் மற்றும் ''பாயிரம் இல்லது பனுவல் இன்றே'' என்ற பண்டைய மரபினைப் பின்பற்று வராதலால் அடியேனைப் போன்ற ஒருவனைக் கொண்டு எழுத சொல்லியிருக்கிறார். இதனால் அடியேனுக்குத்தான் பெருமை.

- கோ.க.அ. வேங்கடாச்சாரி



# நூல் முகம்

நிற்பதும் ஓர், வெற்பகத்து
இருப்பும் விண்; கிடப்பதும்
நற்பெருந் திரைக்கடலுள்
நான்இலாத முன்னெலாம்;
அற்புதன் அனந்தசயனன்
ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும்
கிடப்பதும் என் நெஞ்சுளே[1]

- திருமழிசை பிரான்

முன்னைய பிறப்புகளிலும் இன்றைய பிறப்பிலும் செய்த தவப்பயனின் விளைவாக ஆழ்வார்களின் அருளிச் செயல் களிலும் ஆசாரியர் வியாக்கியானங்களிலும் இரகசிய கிரந்தங் களிலும் ஆழங்கால்பட்டு அநுபவிக்க நேர்ந்தது. அதன் பயனாக பிள்ளை - உலக ஆசிரியரின் அஷ்டாதச இரகசியங்களில் ஆழங்கால்பட்டு அநுபவித்தேன். 'ஐந்து இரகசியங்கள்' பற்றி எழுதும் பேறு பெற்றேன். சற்றேறக்குறைய இருபது ஆண்டுகள் (1960 - 1980) திருமலையப்பன் அடிவாரத்தில் நிறுவபெற்றுள்ள திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்துறை நிறுவனப் பேராசிரியனாகப் பணி புரிந்து 'நாலாயிரம் - நம்மாழ்வார் தத்துவம்' என்னும் பொருள் பற்றி டாக்டர் பட்டம் பெற்றதன் பயனாக திருமலை திருப்பதி தேவஸ்தானம் மூலம் 'ஐந்து இரகசியங்கள்' வெளிவரும் பேற்றையும் பெற்றேன்.

*1974 - 94* பணிகாரணமாக மும்பை வாசியும் திருவல்லிக் கேணி நிரந்தரவாசியுமான டாக்டர் கே.கே.ஏ.வேங்கடாச்சாரி அவர்களின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; அடி யேனின் பேறுங்கூட.

டாக்டர். வேங்கடாச்சாரி அவர்கள் (அகவை 74) சிரோமணி - சமஸ்கிருதம், வித்துவான் - தமிழ் (செ.ப.க.) சாகித்ய ரத்னா -

1. திருச். விருத். 65

இந்து (அலகாபாத் பல்கலைக்கழகம்), இந்தி (உஸ்மானியா பல்கலைக்கழகம், உட்ரேட் பல்கலைக் கழகம் - நெதர்லாந்து) பட்டங்கள் பெற்றவர். மும்பையில் அனந்தாச்சாரி இந்திய மொழி ஆய்வு நிறுவனத்தின் (மும்பை பல்கலைக் கழகம் இணைப்பு) நிறுவனர். இயக்குநராக 20 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றவர். பணிக்காலத்தில் யில் பல பல்கலைக்கழகங்களின் கருத்தரங்குகளிலும் பங்கு பெற்றவர். ஐரோப்பிய நாடுகளில் பாரிஸ், வியன்னா, ஸ்வீடன், ஃபிலாரிடாவில் உள்ள பல்கலைக்கழகக் கருத்தரங்களிலும் இவருக்குப் பங்கு உண்டு. இத்தகைய என் நெடு நாளைய நண்பர் அணிந்துரை வழங்கிப் பெருமை படுத்தியதற்கு அவருக்கு என் நெஞ்சுவந்த நன்றி என்றும் உரியது.

நூல் அச்சு வடிவம் பெறுவதற்குக் காரணமாக இருந்த திருமதி. ஆர். தேவகி அவர்கட்கு (அவ்வை), எண் 1, 3வது மாடி, புதூர் 13-ஆவது தெரு, அசோக் நகர், சென்னை - 600 083 போன் : 55688527)

இந்நூல் அச்சாகும்போது மூலக்கைப்படியுடன் பார்வை படிகளை ஒப்பிட்டுத் திருத்தம் செய்த என் அபிமான புத்திரி டாக்டர். மு.ப. சியாமளாவுக்கு என் ஆசி கலந்த நன்றி என்றும் உரியது.

தொண்ணூறு அகவையை எட்டும் அடியேனுக்கு நல்ல உடல் நலமும் மன வளமும், குன்றாத கண்ணொளியும் நல்கி வரும் என் இதயத்தில் நிரந்தரக் குடியிருப்புக் கொண்ட 'வேங்கடம் மேவிய விளக்கிற்கு' புருஷகார பூதையாகிய பெரிய பிராட்டியார் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

அடியேன்
ந. சுப்புரெட்டியார்
தொ.பே. 262 11583

வேங்கடம்'
13-14, அண்ணா நகர்,
சென்னை - 600 040
ஜூன் - 2005



## உள்ளுறை

# 1. பிரமேய சேகரம்

## (ஆறாவது இரகசியம்)

## 1. பிரமேயசேகரம்

இது பிள்ளை உலக ஆசிரியரின் பதினெட்டு இரகசியங்களில் ஒன்று (ஆறாவது இரகசியம்). ஈண்டு பிரமேயம் - சொல்லப்படும் பொருள். அதாவது இறைவன்; சேகரம் - உயர்வு, பெருமை; பிரமேயம் சேகரம் என்பதை இறைவனது பெருமை, இறைவனது பெருமை, இறைவனது உயர்வு என்று சொல்லலாம்.[1]

ஒரு காரணமும் பற்றாத எம்பெருமானின் கடைக்கண் நோக்கால் நன்மை பரம்பரை உண்டாகும். அதன் அடியாக அறியாத நல்வினை, பகையின்மை உண்டாகும். அதன் அடியாக பகவத் பாகவத விஷயங்களில் மனம் இசையும், அவ்வாறு மனம் இசைகை உண்டாவதால், விடவேண்டிவற்றையும் பற்ற வேண்டியவற்றையும் பகுத்தறிய வேண்டிய ஆர்வம் உண்டாகும். அதனால் நல்லோர் கூட்டுறவும் சதா சார்யனை அடையும் வாய்ப்புகளும் உண்டாகும். இந்த வாய்ப்புகளினால் வீடு பற்றுகளில் உறுதி, வேறு பயன்களில் வைராக்கியம், மேலான பயனில் திடமான ஆர்வமிகுதி உண்டாகும். இவை உண்டானவாறே இதர பயன்களைத் தவிர்ப்பதற்கும் உயர்ந்த பயனைப் பெறுவதற்கும் அடியான சித்தோபாயத்தைப் பற்றுதல் ஏற்படும்; இதனால் பகவானை அடைவதில் விரைவு உண்டாகும். இதனால் ''என் பக்தன் மரணகாலத்தில் கட்டையும் கல்லும் போல் இருப்பினும் நான் அவனை நினைக்கின்றேன்'' (வராக சரபம்) என்கின்றபடியே ஈசுவரனின் நினைவுக்கு இலக்கு ஏற்படும். ஏற்படவே, சூக்கும உடலை அணையும் நிலை உண்டாகும்; உண்டாகவே எம்பெருமானுடன் சேரும் நிலை ஏற்படும். ஹர்த்தன (இதயத்தி லுள்ளவன்) அநுக்கிரகத்தால் போம் வழி பிரகாசம் உண்டாகும். பின்பு இதயமாகிய குகையினின்றும் வெளிவருதல் நடைபெறும். பின்பு தலையிலுள்ள மூர்த்தன்ய நாடியின் வழியாக வெளிவருதல் ஏற்படும். அடுத்து, அர்ச்சிராதி வழியில் செல்லுதல் நடைபெறும். அதனையடுத்து, பரமபதத்திற்குப் போகின்றவர்களை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு

1. பிரமாணம் - ஆதாரம்; பிரமேயம் - சொல்லப்படும் பொருள்; பிரமாதா - ஆதாரம் கொண்டு பொருளை அளந்தறிபவன். தென்புலத்து வைணவ நெறி இந்த மூன்றம்ச அடிப்படையில் வகுக்கப் பெற்றுள்ளது. ஈண்டு பிரமாணம் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள்; பிரமேயம் - எம்பெருமான், சிமந் நாராயணன்; பிரமாதா - ஆசாரியர்கள், எ.டு., இராமாநுசர் (பிரமாதா), ஆழ்வார்களின் அருளிச் செயல் கொண்டு (பிரமாணம்) சீமந் நாராயணனே (பிரமேயம்) முழுமுதற் கடவுள் என்று வைணவ நெறியை ஒரு தத்துவமாக நிறுவினார் என்பது.

போகின்ற தேவதைகளாகிய ஆதிவாஹிகர் கௌரவம் செய்தல் நடைபெறும். அடுத்து ஆவரணத்தைத் தாண்டுதல், பிரகிருதியைத் தாண்டுதல், விரஜையாற்றில் தீர்த்தமாடுதல், சூக்கும உடல் நீங்குதல், ஆகியவை முறையே தொடர்ந்து நடைபெறும். அடுத்து பாபமின்மை, மூப்பின்மை, இறப்பின்மை, துக்கமின்மை, பசியின்மை, தாகமின்மை, வேண்டியவையெல்லாமுடைமை, தடையற்ற சங்கல்ப முடைமைகள் ஆகியவற்றில் தோற்றம் முறையே ஏற்படும். அடுத்து அமாநவன்[2] கரத்தால் தீண்டல், பகவானின் சங்கல்பத்தால் கற்பிதமான திவ்விய உடலை அடைதல், காலம் நடையாடாத திவ்விய தேசம் அடைதல் முறையே தொடர்ந்து நடைபெறும்.

அடுத்து, அரம்ஹரதடத்தில்[3] தீர்த்தமாடுதல், நடைபெறும். பின்பு திவ்விய அலங்காரம், திவ்விய விமானம் ஏறுதல், திவ்விய காந்தாரம் பிரவேசித்தல், திவ்விய அப்சரசுக்களின் கௌரவம் உண்டாகும். அடுத்து திவ்வியகந்த பிரவேசம், பிரம்மகந்த பிரவேசம், அப்ராக்ருத கோபுரம் அடைதல் நடைபெறும். இவற்றை அடுத்து, திவ்விய நகரம் அடைதல், நித்திய சூரிகள் எதிர் கொள்ளல், பெரிய தெரு வழியே ஏகுதல், பிரம்ம தேஜசைப் (பிரம்மத்தின் ஒளியைப்) பெறுதல், திவ்விய கோபுரம் அடைதல், பிரம்ம கிருகம் புகுதல், திவ்விய மண்டபம் அடைதல், திவ்விய கோஷ்டியை அடைதல், பத்தினியுடன் கூடிய சர்வேசுவர தரிசனம் பெறுதல், துதி, கீழ்விழுந்து அஞ்சலி முதலியவைகளைச் செய்து கொண்டு சம்ப்ரமத்துடன் நடத்தல், பரமாத்மாவின் அருகடைதல், பாத பீட பர்யங்கங்களை ஆரோகித்தல், பகவான் மடியேறுதல், பார்த்தல் உரையாடல் முதலிய அநுபவம் ஆகியவை தொடர்ந்து முறையே நடைபெறும்.

அடுத்து, ஆலிங்கனம் முதலான அநுபவம் உண்டாம்; பின்பு சொரூபம் ரூபம் குணம் திருமேனி முதலியவற்றின் அநுபவம் உண்டாகும். அடுத்து, அநுபவத்தாலுண்டான பிரீதியின் மிகுதி, பலவகையான சரீரம் கொள்ளுதல், எல்லாவிடத்திலும், எதிலும், எல்லாக் காலத்திலும், எல்லா நிலையிலும், எல்லாபடியாலும் எம்பெருமானுக்குக் கைங்கரியம் பண்ணுதல் முதலியவை நடைபெறும்.

2. அமாநவன் - இறைவனே இப்பெயருடன் வழங்கப் பெறுகின்றான்.
3. அரம்ஹரதடம் - ஒரு தடாகம்

# 2. பிரபந்ந பரித்திராணம்

## (ஏழாவது இரகசியம்)

# 2. பிரபந்ந பரித்திராணம்

இது பிள்ளை உலக ஆசிரியரின் பதினெட்டு இரகசியங்களில் ஒன்று (ஏழாவது இரகசியம்) பிரபந்ந - பிரபத்தி வழியைக்கடைப் பிடித்தவர்கள்: பரித்திராணம் - பாதுகாப்பு. பிரபந்ந பரித்திராணம் என்பதற்குப் பிரபந்நர்களின் பாதுகாப்பைப் பற்றிக் கூறும் இரகசியம் என்பது பொருள்.

பிள்ளை உலகாசிரியரின் முமுட்சுப்படியில்[1] ஒரு சூத்திரம்.

''ஈசுவரனை யொழிந்தவர்கள் இரட்சகர் அல்லர் என்னுமிடம் பிரபந்ந பரித்திராணத்தில் சொன்னோம்'' (39) என்பது

இதன் பொருள் : உயிர்களுக்கு ஈசுவரன் ஒருவனே உண்மை இரட்சகன். அவனையொழிந்த பெற்றோர், சுற்றத்தினர் முதலியவரும், வேறு தேவர்களும் உண்மை இரட்சகர் ஆகமாட்டார்கள் என்பது ''பிரபந்ந பரித்திராணம்'' (ஏழாவது இரகசியம்) என்ற கிரந்தத்தில் சொல்லப் பெற்றுள்ளது.

விளக்கம் : ஒரு காரணத்தாலன்றி இயல்பாகவே அமைந்த எல்லா உறவுமாய், எந்தக் காலத்திலும் கைவிடாமல் கண்ணும் கருத்துமாய் நோக்கிக் கொண்டு போகும் எம்பெருமானே, உயிர்களைப் பாதுகாக்கும் வன்மை வாய்ந்தவன். பூர்வ கர்மம் முதலிய காரணங்களால் உறவினராயும், நமக்கு ஆபத்து வந்த காலத்தில் அஞ்சி ஒதுங்கி நிற்பவராயும் இருக்கும் பெற்றோரும், மற்ற தேவர்களும் உயிர்களைக் காக்கும் வன்மை வாய்ந்தவர்கள் ஆகமாட்டார்கள்.

இந்த சூத்திரத்தில் விரிவான விளக்கமே 'பிரபந்ந பரித்திராணம்' என்னும் இந்த இரகசியமாகும்.

முமுட்சுவாய் மோட்சம் அடையும் முறையில் சர்வேசுவரனைப் பற்றி இருப்பவன் (1) அநந்யகதித்துவம் (2) ஆகிஞ்சன்னியமும் உடையவனாய் இருத்தல் வேண்டும்.

(1) அநந்யதித்துவம் என்பது ஆன்ம இரட்சணத்திற்கு எம்பெருமானைத் தவிர வேறொரு இரட்சகப் பொருள் அற்றிருக்கை. (2) ஆகிஞ்சன்னியம் என்பது, கன்ம ஞான பக்திகளாகின்ற மற்ற உபாயங் களிலும் அவற்றுக்கு ஏதுவாகவுள்ள ஆன்ம குணங்களிலும் சிறிதும் தொடர்பில்லாமல், அவற்றுக்கு விபரீதங்களானவற்றால் தான் பரிபூர்

1. முமுட்சுப்படி : இதுவும் பதினெட்டு இரகசியங்களில் ஒன்று (முதலாவது இரகசியம்)

ணனாயிருக்கின்ற இருப்பையும் தன்னுடைய சொரூபம் மற்றும் அனைத்துப் பிரகாரத்தாலும் ஈசுவரனுக்கு அத்யந்த பரதந்தரனாயிருக்கின்ற இருப்பையும் அநுசந்தித்து 'நம் செயலுக்கு நாம் கடவோம் அல்லோம்' என்றிருத்தல். முதலில் அநந்யகதித்துவத்தை விளக்குவோம்.

'களைவாய் துன்பம்; களையா தொழிவாய்;
களைகண் மற்றிலேன்'

என்பது நம்மாழ்வார் திருவாக்கு (திருவாய் 5.8 : 8). எம்பெருமான் பக்கலில் முகம் பெறாதொழியினும் பிற்மனை தேடி ஓடிப் பாராமல் அவன் 'இரட்சிக்கின்ற பொழுதும் இரட்சியாத பொழுதும் வேறுபாடு இல்லாமல் இவ்விடம் ஒழிய வேறுபுகல் இல்லை' என்கின்ற திண்ணிய உள்ளத்தோடு இருத்தல் அநந்யகதித்துவம் என்பதை நாம் அறிவோம். இக்கருத்து இவண் காட்டிய திருவாய்மொழியின் முதலடியால் தெளிவாகின்றது. "என் துன்பத்தைப் போக்காய், போக்கா தொழிவாய்; (உன்னைத்தவிர) துணையாவார் வேறு ஒருவரையும் உடையேன் அல்லேன்" என்கின்றார். நீ சரம சுலோகத்தில் 'சர்வ பாபேப்யோ மோட்சயிஷ்யாமி' - "எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கின்றேன்" என்று உறுதி கூறினபடி 'நீ செய்தாலும் செய், தவிர்ந்தாலும் தவிர்; உன் காரியத்தில் நீ எப்படி இருந்தாலும், என் காரியத்தில் நான் உறுதி குலையமாட்டேன்' என்கின்றார் ஆழ்வார். இன்னும்,

"............. திருவேங்கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ்அமர்ந்து புகுந்தேனே"

என்று பிறிதொரு திருவாய்மொழியிலும் (6.10:10) இக்கருத்தையே முதலிக்கின்றார் ஆழ்வார். "திருமலையில் எழுந்தருளியிருக்கும் பூரணனே, உன்னையொழிய உபாயமும் இரட்சகமும் ஒன்றுமற்ற அடியேன், உன் திருவடிகளின்கீழ், என் தலைக்கும் உன் திருவடிக்கும் இடைவெளி இல்லாதவாறு நெருங்கி நுழைந்து, உன்னை உபாயமாகப் பற்றினேன்" என்ற கருத்தினை இப்பாசுரப் பகுதியில் கண்டு மகிழலாம்.[2]

2. இத்தகைய கலப்பினை சைவ சித்தாந்தம் தமிழில் தாள், தலை என்ற இரு சொற்களின் புணர்ச்சியை எடுத்துக்காட்டாகக் கொண்டு விளக்கும். தலை ஆன்மாவையும் தாள் இறைவனையும் குறிப்பனவாகக் கொள்ள வேண்டும். அஃதாவது இறைவனது திருவடிகளில் ஆன்மாவின் தலை பொருந்துகின்றது என்பது இதன் கருத்து. தாளும் தலையும் தமிழ் இலக்கணப்படி புணரும்போது தாள் + தலை = தாடலை என்றாகும். தாள் என்பதிலுள்ள - ள் - மறைய - தலை - யிலுள்ள - த - ட - வாக மாறித் தாடலை ஆகின்றது. இதனை இரு சொற்களாகக் கொள்ளவும் முடியாது. ஒரு சொல் எனக் கொள்ளவும் முடியாது. ஒருவிதத்தில் இஃது ஒரு சொல்; இன்னொரு விதத்தில் இரு சொல், இதைப் போன்றதே இறைவனோடு ஆன்மா ஐக்கியப்படும் விதமும் என்பதே சித்தாந்தத்தின் முடிவாகும் (இது ஒரு வித அத்துவிதக் கலப்பு) இதனை ஈண்டு நினைத்து ஒப்பிடலாம். இந்த ஆசிரியரின் சைவசமய விளக்கு (பாரி நிலையம் 184 பிரகாசம் சாலை, சென்னை - 108) பக்கம் 331 காண்க.



**ஔபாதிகபந்துக்கள் :** உலகில் மாதா பிதாக்கள் தங்கள் மக்களைக் காப்பதாக நினைக்கின்றோம். ஆனால் உண்மையில் அவர்கள் பாதுகாப்பவர்கள் அல்லர். தம் இளமைக்குக் கேடாக இக்குழந்தை பிறந்துவிட்டதே என்று அக்குழந்தையை வெறுக்கக் காண்கிறோம். இக்குழந்தை பிறந்த நேரம் சரியில்லை என்று அக்குழந்தையின் இறப்பினை எதிர்நோக்குவதையும் நாம் காணாமல் இல்லை. பஞ்சம் வந்த காலத்தில் எவரும் அறியாதபடி புதரிலே எறிந்து விடும் சந்தர்ப்பங்களும் உண்டு. ஆபத்து வந்த காலத்தில் கைவிடுவதையும் நாம் காணத்தான் செய்கின்றோம். பொருள், நிலம், காரணமாக விற்கத் துணிவதையும் பார்க்கின்றோம். சிலர் குழந்தையைக் கொன்றுவிடுவதும் உண்டு. இவற்றிற்கு எடுத்துக்காட்டுகள்.

(1) வாரணாசியில் உள்ள ஆரண உவாத்தியாகிய அபஞ்சிகன் என்னும் அந்தணன் மனைவி சாலி என்பாள் தீயொழுக்கத்தால் கணவனைப் பிரிந்து குமரியாடச் சென்றவள் சூலால் வருந்தி வழியிடையே கருவுயிர்த்தாள். இரக்கம் சிறிதுமின்றி அக்குழவியைக் கட்புலன் ஆகாத ஒரு தோட்டத்தில் இட்டுச் சென்றாள் (மணிமேகலை 13- ஆம் காதை).

(2) திருமணம் ஆகாத குந்தி தேவி தனக்கு துருவாச முனிவர் சொன்ன மந்திரங்களின் பலனைப் பரிட்சை பார்ப்பதற்கு ஒரு மந்திரத்தை ஆதவனை நோக்கி ஜபிக்க அவன் அருளால் கர்ணன் பிறந்தான். பழிக்கு அஞ்சி ஒரு பெட்டியில் பொதித்து அக்குழந்தையை ஒரு மிதவையில் வைத்து கங்கையில் விட்டாள். (வில்லிபாரதம் - சம்பவச் சருக்கம்)

(3) கோசிகன் கடனைத் தீர்த்தற் பொருட்டு அரிச்சந்திரன் தன் மனைவி சந்திரமதியையும் மகன் தேவதாசனையும் ஓர் அந்தணனுக்கு விற்கின்றான் (அரிச்சந்திர புராணம்).

(4) கோசிகனின் தங்கையும் அவள் கணவனும் பொன்னுக்காகத் தங்கள் அருமந்த மகனை உயிர்ப்பலி தருவதற்காக விற்கின்றனர்.

(5) கங்கை தனக்கு சந்தனு மூலம் பிறந்த ஏழு குமாரர்களையும் கங்கையில் வீசி எறிகின்றாள்.

(6) சகுந்தலையை விசுவாமித்திரர் மூலம் பெற்ற மேனகை அக்குழந்தைக் கைவிட்டு ஒழிக்கின்றாள்.

(7) கன்னியர், கைம்பெண்டிர் இவர்கள் கள்ளக்காதலால் பெற்ற குழந்தைகளைக் கைவிடுதல் போன்ற நிகழ்ச்சிகள் பலபல.

(8) இரணியன் தன் மகன் பிரகலாதனைப் பல்வேறு விதமாகக் கொல்ல முயல்கின்ற நிகழ்ச்சிகளைக் காண்கின்றோம். (கம்பராமாயணம் யுத்த - இரணியன் வதைப் படலம்).

இவையாவும் தாய் தந்தையர் காப்பவரல்லர் என்பதை மெய்ப்பிக்கின்றன.

(1) பரசுராமன் சமதக்னி முனிவருக்கு இரேணுகையிடம் பிறந்தவன். தந்தை சொற்படி தாயைக் கொன்றவன்.

(2) பரதன் தசரதனுக்குக் கைகேயியிடம் உதித்த மகன். கைகேயி இரண்டு வரங்களால் இராமன் கானாளவும் பரதன் நாடாளவும் ஏற்பாடு செய்தாள். கோசல நாட்டினின்றும் திரும்பிய பரதன் செய்தி கேட்டுச் சினம் கொண்டான். தாயைக் கொல்லவும் துணிந்தான்; நெடியவன் முனியும் என்று அஞ்சி நின்றான்; வசவுகளைக் குவிக்கின்றான்.

மாயீர் மாயா வன்பழி
தந்தீர் முலைதந்தீர்
தாயின் ஏநீர் இன்னும்
எனக்கேன் தருவீரே

என்று மனம் வெறுத்துக் கூறுகின்றான் (கம்பராமாயணம் அயோத்தி - பள்ளி படைப்படலம்)

(3) பிரகலாதன் தந்தையின் தகாத போக்கின் காரணமாகத் தந்தையை வெறுத்தவன். தன் முன்னால் நரசிம்மன் இரணியனின் வயிர மார்பை நகத்தால் பிளந்து கொன்றதைப் பார்த்துக் கொண்டு இருந்தான் (கம்பராமாயணம் யுத்த - இரணியன் வதை).

(4) கம்சன் யது வம்சத்துப் போச குலத்தவனான உக்கிரசேனனின் திருக்குமாரன். இவன் தந்தையை வெறுத்துக் காட்டுக்கு அனுப்பித் தான் அரசினைக் கவர்ந்தவன்.

(5) பொதுவாகப் பெற்றோர்கள் மரண நிலையில் இருக்கும் போதும் மைந்தர்கள்,

சோர்வி னால்பொருள் வைத்ததுண் டாகில்
சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து[3]

என்று பெரியாழ்வார் கூறுகின்ற படி நிர்ப்பந்தித்து ஈசுவரனை மனதில் எண்ணிக் கரைமரம் சேரவொட்டாதபடி அலைத்தல் முடித்தல் செய்யாநிற்பதை இன்றைய உலகில் நாம் காணாமல் இல்லை.

இந்த எடுத்துக்காட்டுகள் யாவும் பெற்ற மக்கள் காப்பவர் அல்லர் என்பதனைத் தெரிவிக்கின்றன.

(1) இராவணன் விசிரவசுவிற்குக் கேசியிடம் பிறந்தவன். கும்பகர்ணன், வீடணன் என்ற இருதம்பியரையுடையவன். தன் சுய நலத்தின் பொருட்டுக் கும்பக் கருணனைப் போருக்கு அனுப்பி இராமனால் கொல்விக்கப் பெற்றவன். வீடணன் அண்ணன் போக்கு பிடிக்காமல் இராமபிரானிடம் சரணம் புகுந்து வாழ்ந்தவன்.

3. பெரியாழ் திரு. 1.5 3



(2). வீடணன் இராவணனைக் கைவிட்டு இராமன்பால் சார்ந்தவன்.

(3). வாலியும் சுக்கிரீவனும் உடன் பிறப்புக்கள். வாலி சுக்கிரீவன் மனைவி உருமியைக் கவர்ந்து அவனைக் கொல்லத் துணிந்தவன்.

(4). சுக்கிரீவன் இராமபிரானைச் சரண் அடைந்து தன் அண்ணனைக் கொல்வித்தவன்.

(5). சுந்தன், உபசுந்தன் உடன் பிறப்புக்கள். பலகாலம் ஒருவரோடொருவர் போரிட்டுக் கொண்டிருந்தவர்கள்.

இவற்றால் உடன்பிறந்தார் காப்பவர் அல்லர் என்பது தெளிவு.

(1). நிடத நாட்டில் மாவிந்த நகரில் சந்திர குலத்தரசனாகிய வீரசேனனின் திருமகனாகத் தொன்றியவன் நளன். விதர்ப்ப நாட்டில் குண்டினபுரத்தில் சூரிய குலத்தரசனாகிய வீமராசனின் மகளாய்ப் பிறந்தவள் தமயந்தி. இவள் கற்பிற் சிறந்த காரிகை. இவளை மணந்தான் நளன். இருவரும் ஒருபாழ்மண்டபத்தில் ஓர்ஆடையுடன் படுத்திருந்த பொழுது ஆடையை அரிந்து, அரிந்த பகுதியை உடுத்திக் கொண்டு காதலன்பு மிக்க தமயத்தியைக் காரிருளில் கைவிட்டு ஏதிலன் போல் பிரிந்து செல்கின்றான். (நளவெண்பா-கலி தொடர்காண்டம் - செய் - 276)

(2). பஞ்ச பாண்டவர்கள் துரியோதனுடன் சூதாடிப் பொருள், அரசு ஆகிய அனைத்தையும் தோற்கின்றனர். திரௌபதியையும் பணயமாக வைத்து அவளையும் இழக்கின்றனர். துச்சாதனன் அரசவையில் அவள் ஆடையைக் களைந்து உலகம் கேட்டிராத முறையில் மானபங்கம் செய்தபோது ஐவரும் அதனைப் பார்த்துக் கொண்டு வாளா இருக்கின்றனர்.

இவற்றால் கணவன்மார் காப்பவரல்லர் என்பது தெளிவாகின்றது. கைகேயி போன்ற பெண்கள் கணவன்மார்களையும் பொருட்படுத்தாது, அவர்கள் சாகும் நிலையையும் கருத்திற் கொள்ளாது இருக்கும் இழிநிலையை நோக்கின் மனைவி காப்பவள் அல்லள் என்பதனை அறிய முடிகின்றது.

ஔபாதிக பந்துக்களாகிய தாய், தந்தை, உடன்பிறப்புக்கள், கணவன், மனைவி ஆகியோரே காப்பவர் ஆகாதபோது மற்றவர்களைப் பற்றி எண்ண இடம் ஏது?

வேறுதெய்வங்கள்: (1) நாட்டாருக்குக் கண்கண்ட தெய்வங்கள் என்று கருதப்படும் ஆதவன், சந்திரன் ஆகியவர் இறைவன் ஆணைக்கு அஞ்சி நாழிகை தவறாமல் தோன்றுவதும் மறைவதுமாகி இருப்பதன்றி, தம் விருப்பப்படி உலாவப் பெறாமையாலும், இராவணன், இரணியன் முதலியோருக்கு சிறு சேவகம் செய்து திரிகையாலும் அவர்கள் நம்மவர்க்குக் காப்பாளர்களாக முடியாது.

(2). **துர்வாசர்** சாபத்தால் மெலிந்து வருந்தியும், மாவலியிடம் தனது செல்வம் முதலியவற்றைப் பறிகொடுத்தும், மேகநாதனிடம் கட்டுண்டும் திரிகின்ற ஒருவனாகையால் வான் ஆளும் **வானோர் தலைவனாகிய இந்திரனும்** நமக்கு இரட்சகன் ஆகமாட்டான்.

(3). **நான்முகனும் மதுகைடவர்களிடம்** நான்மறைகளைப் பறிகொடுத்து 'கண்ணிழந்தேன் தனம் இழந்தேன்' என்று நிலந்துழாவி வருந்துபவன். உருத்திரன் கையினால் தலை அறப்புண்டவன். **இவன் காப்பாளனாவது** எப்படி?

(4). **உருத்திரன்** அழிக்கும் தொழிலையுடையவன், தழல் நிறவண்ணன்[4]. அவனைச் சரண் அடைந்த வாணனது ஆயிரம் தோள்களையும் அவன் கண்ணெதிரிலேயே கண்ணன் துணிக்கக் கண்டும் நெற்றிக் கண்ணைப் புதைத்துக் கொண்டு செயலிழந்து ஓடினவன். உலக குருவும் தன் தந்தையுமான நான்முகன் தலையைக் கிள்ளிக் கையும் கபாலமுமாய் அலைந்து திரிந்தவன். ஆகவே அவன் இரட்சகனாகான்.

(5). அன்னை, அப்பன், மனைவி, மக்களைக் கைவிட்டாவது உலகர் பொருளைத் தேடி அலைவர். அப்படி தேடிய பொருளையும் கள்வர் கவர்வர்; அரசர் அபகரிப்பவர்; உறவினர் அட்டை போல் ஒட்டி உறிஞ்சுவர். நோய்கள் சிகிச்சை மூலம் அழியும். அந்த கைப் பொருள் ஒருவனைவிட்டு அகன்றுபோனால் நஞ்சுண்டு சாகநேருமாதலால் **அந்தச் செல்வமும் இவனுக்குக் காப்பு ஆக மாட்டாது.**

இறைவன் ஒருவனே காப்பன். (1) மாதா, பிதாக்கள் கைவிட்ட நிலையிலும், "பின்னும் நின்று அடியேனுக்கு, உற்றானாய் வளர்த்து என் உயிராகி நின்றான்" (பெரி. திரு.8.9:6) என்ற திருமங்கை யாழ்வார் கூறுவதுபோல் சீமந்நா7ராயணன் ஒருவனே தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு தாய் முகங்காட்டியும் இன்சொற்கள் சொல்லியும் அகவாயிலே நின்று சத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு காப்பவனாவான்.

உடன் பிறந்தாரும் கணவன்மாரும் கைவிட்ட அன்றும் தான் ஏறிட்டுக்கொண்டு கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு போவான். புருவம் நெரித்த விடத்தில் கருத்தறிந்து தேரை நடத்துவான். செத்தாரை மீட்டுக் கொடுப்பான்[5], அகவாயை விடாது, உயிருக்குக் கேடு வரினும் தானும் அக்கேட்டில் பங்கு பெற்று உள்ளிருந்து காத்தருவான். ஆகவே, **இவனே எல்லார்க்கும் இரட்சகன் ஆகின்றான்.** இவனே நிருபாதிகபந்து என்பது தேறி நிற்கின்றது.

4. பெரி. திரு. 6.1,3

5. செத்தாரை மீட்டுக் கொடுத்தல் - பன்னிரண்டு ஆண்டுகட்கு முன்பு கடலில் நீராடும் போது மூழ்கி இறந்து போன சாந்தீபினி மகனை - குருதட்சிணையாக மீட்டுக் கொடுத்தான் கண்ணன். (இந்த ஆசிரியரின் வைணவ உரை வளம் - 4, பக் 20-இல் காண்க) பாரிநிலையம், 184. பிரகாசம் சாலை, சென்னை - 108.





(2). ஆகிஞ்சன்னியம். இது மேலே விளக்கப் பெற்றது. சுருக்கமாகக் கூறினால் கன்மஞான பக்திகளாகின்ற மற்ற உபாயங்களில் தொடர்பற்று இருத்தலாகும். இந்த நிலையைத் திருமங்கையாழ்வார்,

**நலந்தான் ஒன்றுமிலேன்,**
**நல்லதோரறம் செய்துமிலேன்**

என்று (பெரி.திரு.1.9:4) கூறியிருத்தலை அறியலாம். 'சமதமங்களாகின்ற ஆன்ம குணங்களையும் பெற்றிலேன், கன்ம ஞான பக்திகளாகின்ற அறச் செயல்களையும் செய்துமிலேன்' என்கின்றார் ஆழ்வார்.

இங்ஙனம் அநந்யகதித்துவம், ஆகிஞ்சன்னியம் ஆகிய இரண்டையும் அநுசந்தித்தவனாய் ஈசுவரனையே உபாயமாகப் பற்றுகையாலே, கருமங் காரணமாக வந்த இவ்வுடலைத் துறக்குங் காலத்தில் 'என் பக்தன் மரண காலத்தில் கட்டையும் கல்லும் போல் இருப்பினும் அவனை நான் நினைக்கிறேன்; உயர்ந்த பதவியான பரமபதத்திற்கு அழைத்துச் செல்லுகின்றேன்' என்று வராக சரமத்தில் அருளிச் செய்தபடியே ஈசுவரன் தானே சரக்காளனாய் வந்து, அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதம்வரையில் கொண்டு சென்று நித்திய முக்தரோடு ஒரு கோவையாக்கி - நித்திய கைங்கரியத்தையும் கொடுத்தருளுவான்.

# 3. சாரசங்கிரகம்

ஸ்ரீ மந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே
ஸ்ரீ மதே நாராயணாய நம.

என்பது துவய மந்திரம்[1]. இதில் இரண்டு வாக்கியங்கள் உள்ளன வாதலால் இது துவயம் (=இரண்டு) எனப் பெயர் பெற்றது. இது எம்பெருமானால் பரமபதத்தில் பெரியபிராட்டியாருக்கு உபதேசிக்கப் பெற்றது.

பிள்ளை உலக ஆசிரியர் தாம் இயற்றியுள்ள இரகசியங்களில் இந்த மூன்று மந்திரங்களையும் இரு முறைகளில் அமைத்துள்ளார். தாம் இயற்றியுள்ள முமுட்சுப் படியில் (1) திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்ற வரிசையிலும், யாத்ருசிகப்படி (12), பரந்தபடி (13), ஸ்ரீயபதிப்படி (4) என்ற மூன்றிலும் திருமந்திரம், சரமசுலோகம், துவயம் என்ற வரிசையிலும் அமைத்துள்ளார். இரண்டு விதமாகவும் அருளிச் செய்யலாம். ஆச்சான் பிள்ளையும் வாதிகேசரி அழகிய மணவாள சீயரும் இங்ஙனமே அருளிச் செய்துள்ளனர்.

சரமசுலோகத்தை முன்னதாகவும் துவயத்தை அதனை அடுத்தும் அருளிச் செய்தமைக்குக் காரணங்கள் இரண்டு, அவற்றை நோக்குவோம்.

*(1). சரமசுலோகம்:* ''நீ என்னைப் பற்று; உனக்கு வீடு பேற்றை நல்குகின்றேன்'' எனக் கண்ணன் விதிக்கும் கட்டளையும், ''சீமந்நாராயணனுடைய இணைத்தாமரை அடிகளையும் பற்றுகின்றேன் எனச்சொல்லும் சேதநனது செயலையும் தெரிவிக்கின்றன. இம்முறையில் சரமசுலோகம் விதி வாக்கியமாகவும், துவயம் அநுட்டான வாக்கியமாகவும் அமைந்துள்ளன. ஆதலின் விதி முன்னும், அநுட்டானம் பின்னும் இருத்தல் முறை என்னும் கருத்துடன் சரமசுலோகம் முன்னும் துவயம் பின்னுமாக அமைக்கப் பெற்றன.

(2). திருமந்திரம் உபேயத்தில் (அடைய வேண்டிய பொருளில்) நோக்குள்ளது. சரம சுலோகம் உபாயத்தில் (அடையவேண்டிய வழியில்) நோக்குள்ளது. துவயமோ உபாய உபேயங்களின் அநுட்டானங்களைத் தெரிவிக்கின்றது. ஆதலின் மற்ற இரகசியங்களில் திருமந்திரம் சரம சுலோகம் துவயம் என்னும் முறையில் அமைக்கப் கொள்ளுதல்

1. ஏனைய இரண்டு மந்திரங்கள் - திருமந்திரம், சரமசுலோகம் என்பன.

. இவற்றை எம்முறையில் வெளிப்படுத்தினும் பொருள் பொருத்தத்திற்குக் குறைபாடு இல்லை.

(3). துவயம்: பிள்ளை உலக ஆசிரியர் தமது 'சாரசங்கிரகம்'[2] என்னும் எட்டாம் இரகசியத்தின் தொடக்கத்தில் கூறுவது. உலகமனைத்திற்கும் இதத்தைத் தருவதிலேயே ஊன்றியிருக்கின்ற திருமறையிலேயும், திருமறைக்குத் துணை நூல்களாக எழுந்துள்ள தர்ம சாத்திரங்கள் (அறநூல்கள்) இதிகாசங்கள், புராணங்கள் முதலிய எல்லாவற்றிலும் பிரசித்தமாய் இருப்பதும், எம்பெருமானுடைய எல்லாவித சொத்தாயும் நம் ஆசாரியர்கட்கு ஆபத்திலே உதவக் கூடிய செல்வமாயும் உள்ள இரண்டு பொருள்களை நிலைநாட்டுகின்ற படியாலே துவயம் என்ற திருநாமத்தைக் கொண்டு இரண்டு வாக்கியங்களாக அமைந்து பத்துப் பொருள்களை வெளியிடுகின்றது. அவையாவன:

(1) திருமகள் கேள்வனாக இருக்கும் தன்மை; (2) நாராயனாக இருக்கும் தன்மை; (3) நாராயணனுடைய எல்லா உலகங்களுக்கும் அடைக்கலமாக இருக்கும் திருத்தாமரை (யடிகள்); (4) அவற்றினை அடைவிக்கும் தன்மை; (5) அதற்குத்தகுவதாய் சேதநன் செய்ய வேண்டிய பிரார்த்தனையோடு கூடிய செயல்; (6) திருமகள், அவளுடைய கேள்வன் ஆகியவர்கட்கு எப்பொழுதும் தொண்டு புரிதலையே வேண்டுகின்ற பொருளைத் தரும் நித்திய சம்பந்தம் (எப்பொழுதும் உள்ள தொடர்பு); (7) கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளுகின்ற எம்பெருமானுடைய அளவற்ற அநுபவிக்கும் தன்மை; (8) எல்லாவற்றிற்கும் தலைவனா யிருக்கும் தன்மை; (9) நித்திய கைங்கரியத்துவம்; (10) கைங்கரியத்திற்குத் தடையாக இருக்கக் கூடிய அனைத்தையும் அழிக்கக் கூடிய பொருட் சிறப்புகள்.

இந்தப் பத்துப் பொருட்சிறப்புகளையும் உபநிடதம் போலுள்ள திருவாய் மொழியில் பத்துப் பத்தாலும் நம் பூர்வாசாரியர்கள் அடைவே சேர்த்து அநுசரித்துக்கொண்டு போவர். இவற்றை அடுத்து வரும் இயல்களில் தெளிவோம்.

இவ்விடத்தில் ஈட்டாசிரியர் துவயத்தின் பொருளை விவரணம் செய்வதையும் நோக்கலாம். அவ்விவரணம்: முதல் மூன்று பத்துகளாலே துவயத்தின் இரண்டாம் வாக்கியத்தின் பொருளை விவரிக்கின்றார்; மேல் மூன்று பத்துகளாலே முதல் வாக்கியத்தின் பொருளை விவரிக்கின்றார். மேல் மூன்று பத்துக்களாளே உபாயத்திற்குத் தகுதியாக குணங்களையும், ஆன்மாவிலும், ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் தமக்கு நசையற்ற படியையும், அவனோடு தமக்குண்டான நிருபாதிக சம்பந்தத்தையும் (காரணம் பற்றாத உறவு) அருளிச் செய்கின்றார். பத்தாம் பத்தாலே தாம் வேண்டினபடியே பெற்றபடியைச் சொல்லித்

2. சாரசங்கிரகம்- சார சுருக்கம்.



தலைக்கட்டுகின்றார். ஒவ்வொரு பத்திலும் சொல்லப்படுகின்றவற்றை ''ஈடு-மகாப் பிரவேசம் - திருமகள் கேள்வன்- இரண்டு'' என்பதில் (பக்கம் 49-53) கண்டு தெளியலாம்[3].

## 1. திருமகள் கேள்வனாக இருக்கும் தன்மை

இந்தச் சிறப்பு திருவாய்மொழியின் முதல் பத்தால் தெளிவாகின்றது. இறைவன் அடியார்க்கு எளியவன் என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (1-3) முதற்பாசுரம்.

(1). பத்துடை அடியவர்க் கெளியவன்,
பிறர்களுக் கரிய
வித்தகன், மலர்மகள் விரும்பும்நம்
அரும்பெறல் அடிகள்
மத்துறு கடைவெண்ணெய்க் களவினில்
உரவிடை யாப்புண்டு
எத்திறம், உரலினோடு இணைந்திருந்து
ஏங்கிய எளிவே (1).

(பத்துஉடை - பக்தியையுடைய எளியவன் - சுலபன்; பிறர் - மற்றையோர்; வித்தகன் - ஆச்சரியபூதன்; மலர்மகள் - பெரிய பிராட்டியார்; நம் அடிகள் - நம் சுவாமி; கடைவெண்ணய் - கடைகின்ற வெண்ணெய்; உரவிடை - மார்பினிடத்தில்; ஆப்புண்டு - கட்டுண்டு; உரலினோடு - உரலோடு; இணைந்திருந்து - பொருந்தியிருந்து; எளிவு - எளிமைக்குணம்; எத்திறம் - எப்படிப்பட்டது)

எம்பெருமானுடைய சௌலப்பியம் நன்கு விளங்கினது அவதாரங்களிலாதலால் அப்படிப்பட்ட அவதாரங்களுள்ளும் நீர்மைக்கு எல்லை நிலமான கிருட்டிணாவதாரத்திலே இழிந்து, அதிலேயும் பரத்துவத்தோடு சமமாகச் சொல்லக் கூடிய நிலைகளில் செல்லாமல் வெண்ணெய் களவு கண்டு கட்டுண்டு வருந்தி ஏங்கி நின்ற நிலையில் அகப்பட்டு 'இப்படியும் ஓர் எளிமைக் குணம் உண்டோ?' என்று ஈடுபடுகின்றார்.

இந்தப் பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி 'மலர்கள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்' என்பது. இறைவன் (1) பக்தியுடைவர்கட்கு எளியவன்; (2) எம்பெருமானையே உபாயமாகக் கொள்ளாமல் பிறிதொன்றை உபாயமாகக் கொள்பவர்கட்கு அரியவன்.

3. திருவாய் மொழி - ஈட்டின் தமிழாக்கம் - தொகுதி - பு.ரா.புருடோத்தம நாயுடு பதிப்பு (சென்னைப்பல்கலைக்கழகம்)

மலர்மகள் விரும்பும்: மேற்குறிப்பிட்ட இரண்டுக்கும் அடி இவளுடைய சேர்த்தியே. மணம் போலே மலரை இருப்பிடமாக உடையவள்; அதிலே மணம்தான் ஒரு வடிவு கொண்டாற் போலே இருப்பவள்; நாட்டார் மணத்தை விரும்புவார்களாகில், இவளும் அதனையே விரும்புபவளாக இருத்தல் வேண்டும். அரும் பெறல் அடிகள் - பெறுதற்கரிய நம் சுவாமிகள். பெரிய பிராட்டியார் அடிக்கொதித்து அதனைவிட்டு 'அகலகில்லேன் இறையும்' (திருவாய் 6.10.10) என்கிறபடியே எம்பெருமானின் திருமார்பை விடடிாதே இருக்கப் பெற்ற பெருமான். 'பெரிய பிராட்டியார் விரும்பும் படி இருக்கை போலே காணும் அறப்பெரிய இறைவனுக்கு இலக்கணம்' என்பது ஈடு. "சனகனுடைய குலத்தில் பிறந்த சீதாப்பிராட்டி விரும்பும் கணவனாக எவன் இருக்கின்றானோ அவனுடைய திறல் வலி அளி முதலிய குணங்கள் அளவிட்டு அறிய முடியாதன"[4] என்பது வால்மீகி இராமாயணம். முதல் திருவாய் மொழியில் "உளன் சுடர்மிகு சுருதியுள்" (1.1:7) என ஆழ்வார் ஏகாந்தமாகக் காட்டின இலக்குமி சம்பந்தம் இப்பாசுரத்தில் நன்கு வெளியிடப் பெற்றதாயிற்று 'மலர்கள் விரும்பும் நம் அடிகள்' என்ற பாசுரப் பகுதியால்.

'மாறனைமால் சீலகுணத்தால் சேர்த்தல்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (1.5) ஒன்பதாம் பாசுரம் :

(2). மாயோம், தீய அலவலைப்
பெருமா வஞ்சப் பேய்வீயத்
தூய குழவி யாய்விடப்பால்
அமுதா அமுது செய்திட்ட
மாயன், வானோர் தனித்தலைவன்
மலராள் மைந்தன், எவ்வுயிர்க்கும்
தாயோன், தம்மான், என் அம்மான்,
அம்மா மூர்த்தி யைச்சார்ந்தே (9)

(தீய-கொடிய; அலவலை-பலவாறு மிகுதியாகப் பேசுபவள்; பெருமா - மிக பெரிய; பேய் - பூதனை; வீய- முடியும் படி; விடப்பால் - நஞ்சுகலந்த பால்; மாயன் - ஆச்சரியன்; வானோர் - நித்தியசூரிகள்; மலராள் - திருமகள்; மைந்தன் - கொழுநன்; தாயோன் - தாய் போன்றவன் தம்மான் - தனக்குத்தானே சுவாமி; அம்மான் - சுவாமி; சார்ந்து - கிட்டி; மாயோம் - மாயாது வாழக்கடவோம்)

'பல மேம்பாடுகளையுமுடைய இறைவனைக் கிட்டினேன்; ஆதலால் பிரியோம்' என்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி 'மலராள் மைந்தன்' என்பது. மலராள் மைந்தன் - 'தேவிமாராவார் திருமகள் பூமி; யேவ மற்றமார் ஆட்செய்வார்' (திருவாய் 8.1:1) என்கின்றபடியே அவர்கள்

4. ஸ்ரீராமா. ஆரண் 37 : 108



விரும்பித் தொண்டுகள் செய்ய, பெரிய பிராட்டியாரும் தானுமாக இருப்பவன். மைந்தன் - அவளக்கு மிடுக்கானவன். இனி, இதற்கு 'அவளுடைய சேர்த்தியாலே நித்தியமான புதிய யௌவனத்தை யுடையவன்' என்று பொருள் கூறலுமாம்.

'ஆராதனைக்கு எளியவன்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (1.6) ஒன்பதாம் பாசுரம்:

(3). தரும அரும்பயன் ஆய
திருமக ளார்தனிக் கேள்வன்;
பெருமை யுடைய பிரானார்
இருமை வினைகடி வாரே (9)

(தரும - தருமங்களினுடைய; அருபயன் - அரிய பயன்; தனிக்கேள்வன் - ஒப்பற்ற நாயகன்; பெருமை - மேன்மை; பிரான் - சர்வேசுவன்; இருமை - இருவகைப்பட்ட; வினை - கருமம்; கடிவார் - போக்குவார்)

'பிராட்டி அருகிலிருக்கும்போது, பல இடையூறுகளைப் போக்கிப் பரம புருஷார்த்தத்தையும் தந்தருள்வான்' என்கின்றார்.

இதில் நமக்கு வேண்டிய பகுதி 'திருமகளார் தனிக் கேள்வன்' என்பது. பெரிய பிராட்டியாருக்குக் கணவன் ஆகையாலே, இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடி இருக்கின்றவன். "சனக குலத்தில் அவதரித்த பிராட்டியானவள் எவனுக்கு மனைவியாக இருக்கின்றாளோ, அவனுடைய திறல், வலி முதலாயின அளவிட முடியாதவனாக இருக்கின்றன"[5] என்கின்றபடியே, திருமகள் கேள்வனாகையாலே வரும் ஏற்றம் உள்ளது இவன் ஒருவனுக்க மேயாதலின் 'தனிக் கேள்வன்' என்று சுட்டப் பெற்றது.

'ஆழ்வாரோடு எம்பெருமான் கலந்தவகை' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (1:9) முதல் பாசுரம் :

(4) இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
எவையும் எவரும் தன்னுளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான்
கண்ண பிரானென் அமுதம்,
சுவையன்; திருவின் மணாளன்
என்னுடையச் சூழல் உளானே (1)

(இவை - அண்மையில் உள்ளவை; அவை - தொலைவில் உள்ளவை; உவை - இடையில் உள்ளவை; இவர் - அண்மையில் உள்ளவர்; அவர் - தொலைவில்

5. ஸ்ரீராமா.ஆரண் 37:108

உள்ளவர்; உவர் - இடையில் உள்ளவர்; எவையும் - எல்லா அசேதநங்களும்; எவரும் - எல்லா சேதனங்களும்; ஆகியும் - ஆகும்படி வைத்தும் (பிரளய காலத்தில்); ஆக்கியும்-படைத்தும் (படைப்புக் காலத்தில்); அவையுள் - அந்த சேதநா சேதநங்களுக்கு அந்தர்யாமியானவன், தனிமுதல் - ஒப்பற்ற காரண பூதன்; எம்மான் - என்சுவாமி; சுவையன் - இரசிகன்; திரு - பெரிய பிராட்டியார்; மணாளன் - கேள்வன்; சூழல் - சுற்றுப்புறம்; உளான் - தங்கியுள்ளான்)

'ஜகக்காரணபூதனாயும் சர்வ சுவாமியாயும், திருமகள் கொழுந்தனு மான கண்ணபிரான் என்னுடைய சூழலை விட்டுப் போகாதபடியானான்' என்கின்றார்.

இப்பாசுரத்தில் 'திருவின்மணாளன் என்னுடைச் சூழல் உளானே' என்பதுவே நமக்கு வேண்டியபகுதி. 'என் அமுதம் திருவின்மணாளன்' - சுவையன் ஆகையாலே சுவையன் ஆனான் என்று யோசித்து விளக்குவார் அழகிய மணவாள சீயர். திருவின் மணாளன் - இவருடைய அமிர்தம் ஒரு மிதுனம் (இரட்டை) ஆயிற்று. இதனால் மேற்கூறிய சுவைக்கு ஊற்றுவாய் அருளிச் செய்யப் பெற்றது. 'என்னுடையச் சூழல் உளானே' - பெரிய பிராட்டியார் 'அகலகில்லேன் இறையும்' (திருவாய் 6.10:10) என்னப் பிறந்தவன், என் பக்கத்தில் வாழ்தல் தன் பேறாக வாழ்கின்றான். "எந்த இராமனுடைய திருவருளால் இம்மக்கள் எப்பொழுதும் தெளிந்த மனத்தையுடையவர்களாக இருக்கின்றார்களோ, அப்படிப்பட்ட இராமன் சுக்கிரீவனுடைய அருளை நல்ல மனத்துடன் விரும்புகின்றார்"[6] என்றும் "தம்மை ஒழிந்தார்க்கெல்லாம் நாதனாக இருக்கும் இராமன் சுக்கிரீவனை நாதனாக விரும்புகின்றான்"[7] என்றும் கூறப்பெறுகின்றவாறே 'ஆகியும் ஆக்கியும் காக்கும் தனிமுதல் எம்மான்' ஆகிய இறைவன் என்னை விட்டுப் பிரிய மனமின்றி என் அருகிலேயே தங்கியிருக்கின்றான் என்பார் "என்னுடையச் சூழல் உளானே" என்கின்றார்.

இதே திருவாய் மொழியில் (1.9) மூன்றாம் பாசுரம்:

(5) அருகல் இலாய பெருஞ்சீர்
அமரர்கள் ஆதி முதல்வன்;
கருகிய நீலநன் மேனி
வண்ணன்செந் தாமரைக் கண்ணன்;
பொருசிறைப் புள்ளுவந்து ஏறும்;
பூமக ளார்தனிக் கேள்வன்;
ஒருகதி யின்சுவை தந்திட்டு,
ஒழிவுஇலன் என்னோடு உடனே(3)

(அருகல் - குறைதல்; பெருசீர் - சிறந்த கல்யாண குணங்கள்; அமரர்கள் - நித்தியசூரிகள்; ஆதி முதல்வன் - தலைவன்; கருகிய - கறுத்த; வண்ணன் - நிறத்தையுடையவன்; புள் - கருடன்; உவந்து - விரும்பி; பூமகளார் - பெரிய பிராட்டியார்;

6. ஸ்ரீராமா.கிட்கிந் 4:21
7. மேலது. 4:18



தனிகேள்வன் - ஒப்பற்ற நாதன்; கதி - வழி; சுவை - இனிமை; ஒழிவிலன் - தவிருகிறான் இல்லை)

'பெரியதிருவடி திருவனந்தாழ்வான்' பிராட்டிமார் முதலானோ ரோடு ஒரோரு வகையால் பரிமாறுவபன் எல்லா வகையாலும் பரிமாறி என்னை ஒருக்காலும் விடாதபடியானான்' என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் 'பூமகளார் தனிக்கேள்வன்' என்பது நமக்கு வேண்டிய பகதி. பூமகளார் தனிக் கேள்வன் - மலரில் மணம் வடிவு கொண்டாற் போன்று இருப்பவன்; இன்ப வடிவினளான பெரிய பிராட்டியாருக்கு வல்லபன். இப்படிப்பட்ட ஐசுவரியத்திற்கு இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடி இருக்கின்றவன்.

'ஈசுவரன் காரணமின்றிச் செய்யும் உபகாரம்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (1.10) நான்காம் பாசுரம்:

(6). நெஞ்ச மே! நல்லை நல்லை! உன்னைப் பெற்றால்
என்செய்யோம்? இனி என்ன குறைவினம்?
மைந்தனை மலராள் மணவாளனைத்
துஞ்சும்போதும் விடாது தொடர்கண்டாய் (4)

(நெஞ்சமே - மனமே; நல்லை - நன்மையுடையை; என் செய்யோம் - எதைத்தான் முடிக்கமாட்டோம்; குறைவினம் - குறையுடையோம்; மைந்தன் - என்றும் இளையவனாய் இருப்பவன்;மலராள் - திருமகள்; மணவாளன் - நாதன்; துஞ்சும் போதும் - அகன்று மறைந்த போதும்; விடாது தோடர் - விடாமல் தொடர்ந்து நில்)

'தாம் சொன்னவாறே மேல் விழுந்து தொழுத நெஞ்சைக் கொண்டாடி என் தாழ்மையை நினைந்து நான் பிரிகின்ற காலத்திலும் நீ எம்பிரானை விடாதே கொள்' என்கிறார்.

இந்தப் பாசுரத்தில் 'மைந்தனை மலராள் மணவாளனை' என்பது நமக்கு வேண்டிய பகுதி. மைந்தனை - என்றும் இளையவனாக இருப்பவனை; மலராள் மணவாளனை - பெரிய பிராட்டியார் 'அகலகில்லேன் இறையும்' (திருவாய் 6.10:10) என்னும் விஷயத்தை யென்றோ நான் உன்னை 'விடாதே கொள்' என்கின்றேன். 0அதாவது 'உன்னை நான் அனுபவிக்கச் சொல்லுகின்றேன்' என்பதாம்.

ஆக, இந்த ஆறு பாசுரங்களிலும் குறிப்பிடப் பெற்ற பகுதிகளால் 'திருமகள்கேள்வனாக இருக்கும் தன்மை' நுவலப் பெற்றிருப்பதை அறியலாம்.

## 2. நாராயணனாக இருக்கும் தன்மை

இந்தச் சிறப்பு திருவாய்மொழியின் இரண்டாம் பத்தால் தெளிவாகின்றது. 'தலைவி பிரிவாற்றாமைக்கு வருந்தல்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (2.1) ஏழாம் பாசுரம்:

(1). தோற்றோம் மடநெஞ்சம்
எம்பெருமான் நாரணற்கு; எம்
ஆற்றாமை சொல்லி
அழுவோமை, நீநடுவே
வேற்றோர் வகையில்
கொடிதாய், எனைஊழி
மாற்றாண்மை நிற்றியோ?
வாழி! கனை இருளே !(7)

(தோற்றோம் - பறிகொடுத்தோம்; ஆற்றாமை - துன்பத்தினைப் பொறுத்துக் கொள்ள இயலாமை; சொல்லி - வாய் விட்டுச் சொல்லி; அழுவோமை - அழுகின்ற எங்களை; நடுவே - நடுவில் நுழைந்து; வேற்றோர் வகையில் - பகைவர்கள் நலிகின்ற வகையைக் காட்டிலும்; கொடிதாய் - கொடுமையாகி; எனை ஊழி - காலம் உள் அளவும்; மாற்றாண்மை - பகைதன்மை ஆளுகையில்; நிற்றியோ - நிற்கிறாயே; கனஇருள் - கனத்திருக்கின்ற இருள்.)

இத்திருவாய் மொழி மகள் பாசுரமாக நடைபெறுகின்றது. இப்பாசுரத்தில் ''இருளே, நீயும் எங்களைப் போலே, எங்கள் திரளில்[8] சேர்ந்து, கதறியழ வேண்டியிருக்க, அது செய்யாததுமல்லாமல், பகை வரைக் காட்டிலும் கொடிதாக நின்று எங்களை இம்சிக்கின்றாயே! இப்படியும் ஒரு கொடுமை யுண்டோ? நீ கொடுமை நீங்கி வாழ்க'' என்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி 'எம் பெருமான் நாரணற்கு' என்பது. இதன் பொருள் - 'எமக்கு சுவாமியான நாராயணனுக்கு' என்பதாகும். ஈண்டு 'நாராயணன்' என்ற சொல்லுக்கு அன்மொழித் தொகையாகவும் நான்காம் வேற்றுமைத் தெகையாகவும் பொருள் கொள்ளலாம். இதனால் 'வாத்சல்ய குணமுடையவனுக்கு', 'சுலபனாக இருப்பவனுக்கு' என்று பொருள் படுகின்றது. நாரங்களை இருப்பிடமாக வுடையவன் என்ற பொருளில் வாத்சல்யம்; நாரங்களுக்க இருப்பிட மாயுள்ளவன் என்ற பொருளில் சுலபம். நாரம்- ஆன்மாக்கள்; வாத்சல்யம் - அன்பு;(வத்சம்-கன்று).

'பன்னிருநாமப்பாட்டு' என்னும் திருவாய்மொழியில் (2.7) முதல் பாசுரம்:

(2). கேச வன்தமர் கீழ்மேல்
எமரேழ் எழுபிறப்பும்;
மாசதிர் இதுபெற்ற நம்முடை
வாழ்வு வாய்க்கின்றவா!
ஈசன் என்கரு மாணிக்கமென்
செங்கோலக் கண்ணன், விண்ணோர்

8. நாரை, அன்றில், கடல், வாடை, வானம், இளம்பிறைச் சந்திரன் இவற்றையெல்லாம் உளப்படுத்திக் கொண்டு 'எங்கள்' என்கின்றார்.



நாயன், எம்பிரான், எம்மான்
நாரா யணனாலே (1)

(கேசவன் தமர் - பகவத் பக்தராகப் பெற்றவர்கள்; கீழ்மேல் - கீழும்மேலும் உள்ள; ஏழ் ஏழு பிறப்பும் - ஏழ்ஏழ் பிறப்புகளிலும்; மாசதிர் - பெரிய சிறப்பு; நம்முடைய வாழ்வு வாய்க்கின்ற ஆ - நம்முடைய வாழ்ச்சி வளருகின்றபடி என்னே; ஈசன் - எல்லார்க்கும் சுவாமி; எம்செம்கோலம் கண்ணன் - சிவந்து அழகிய திருக்கண்களை நான் அநுபவிக்கும்படி செய்கின்றவன்; விண்ணோர் - நித்திய சூரிகள்)

'சம்பந்தி சம்பந்திகள் பக்கலிலும் எம்பெருமான் பேரன்பு கொண்டவனான படியைக் கண்டு, இவையெல்லாம் என்பக்கலுண்டான விஷயீகார அதிசயமே யன்றோ?' என்று மகிழ்ந்தவராகின்றார்.

இந்தப் பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி, 'எம்பிரான் எம்மான் நாராயணனாலே' என்பது. எம்பிரான் எம்மான் - என்னை வடிவழகைக் காட்டித் தோறபித்து, என்னை அவ்வடிவழகை அநுபவிப்பித்த உபகாரகன். நாரயணனாலே - தன் மேன்மையைப் பாராமல் உகவாதாரை யும் விடமாட்டாதபடி வாத்சல்யனாயுள்ளவனாலே. அதாவது ''சர்வேசு வரனாயும், கண்ணழகாலே என்னையும் ஈடுபடுத்தித் தன் வடிவழகை முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுத்தவனாயும் நித்திய சூரியகளைத் தோறபிக்குமாப் போலே வடிவழகாலே என்னையும் தோறபித்து விஷயீகரித்த மகோபகாரகனாயிருக்கின்ற நாராயணனாலே'' என்கின்றார்.

'நாராயணனாலே' என்ற இடம் மாசதிரினுடைய உபபாதநம். அதாவது நாரயாணபதத்துக்கு அன்மொழித்தொகைப் பொருளில் வாத்சல்யம் சொல்லுகையாலே, 'மாசதிர்' என்பது பகவத்கிருபையைச் சொல்லுமிடத்து மாசதிரக்கு நாரயண பதம் உப பாதநமாயிருக்கும். உபபாதநம்-விரிவு

இதே பதிகத்தின் இரண்டாம் பாசுரம் (2.7:2)

(3). நாரணன்; முழுஏழ் உலகுக்கும்
நாதன்; வேதமயன்;
காரணம், கிரிசை, கருமம்,
இவைமுதல்வன்; எந்தை;
சீரணங்கு அமரர் பிறர்பல
ரும்தொழுது ஏத்த நின்று
வாரணத் தைமருப்பு ஒசித்த
பிரான்; என் மாதவனே (2)

(நாரணன் - நாராயணன்; நாதன் - சர்வ சுவாமி; வேதமயன் - வேத சொரூபி; காரணம் - காரணப் பொருள்; கிரிசை - காரியப் பொருள்; கருமம் - பயன்கள்; முதல்வன் - நிர்வாககன்; சீர் அணங்கு - சிறப்புப் பொருந்திய; அமரர் - நித்திய சூரிகள்; தொழுது ஏத்த - வணங்கித் துதிக்க; வாரணம் - குவலயா பீடம்; மருப்பு - கொம்பு; ஒசித்த - முறித்த; மாதவன் - திருமால்; எந்தை - என்னை அடிமை கொண்டவன்)

முதற் பாசுரத்தில் நாரயண சப்தம் சொல்லும்படி நேர்பட்டது. அதற்குப் பொருள் அருளிச் செய்வதாக இப்பாசுரம் அமைகின்றது.

இந்தப் பாசுரத்தில் 'நாரணன் முழு ஏழ் உலகுக்கும் நாதன்' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். முதற் பாசுரத்தில் நாராயணத் திருநாமம் நுவலப் பெற்றது. ஈண்டு அதன் பொருள் அநுபவம் பண்ணுவதாக அமைகின்றது. இங்கு நாரணன் என்றது - நாராயண பதத்திற்குப் பொருள் யாதெனில் என்றபடி. முழு ஏழ் உலகுக்கும் நாதன் என்றது - நாராயண நாமத்தின் திரண்ட பொருள் சொன்னபடி. 'நார' - என்பதால் உலகத்திலுள்ள எல்லா சேதந, அசேதநப் பொருள்களும் சொல்லப் பெறுகின்றன. அவற்றுக்கெல்லாம் 'அயனம்' -முன்பு குறித்த எல்லாப் பொருள்களுக்கும் தான் ஆதாரமாய் உடையவன் (பொருள்களுள் வியாபித்திருக்கின்றவன்) என்பதையும் குறிக்கின்றது. வேற்றுமைத் தொகை, அன்மொழித் தொகை என்ற இரண்டு இலக்கணங்களாலும் தேறிய பொருள் பரத்துவமும் சௌலப்பியமும் ஆகும் என்பர் பிள்ளை உலக ஆசிரியர் தமது முமுட்சுப்படியிலும்[9]. இவை மட்டுமேயல்லாமல் ஒவ்வொர் இலக்கணத்திலும் பரத்துவ சௌலப்பியங்கள் ஆகிய இரண்டையும் தேறிய பொருளாய்க் கொள்ளலாம்.

ஈசுவரன் தன்னை யொழிந்த எல்லாப் பொருள்கட்கும் தன் சங்கற்பத்தாலும் தன் சொரூபத்தினாலும் ஆதாரமாயிருப்பவன் என்பது வேதாந்த சாத்திரங்களில் சொல்லப்படும் பொருள். ஒவ்வன்றையும் தன் சங்கற்பத்தால் தரிக்கும்போது பரத்துவம் வெளிப்படுகின்றது. பொருக்ளின் உயர்வு தாழ்வுகளை நோக்காது எல்லாவற்றையும் தானே தரிக்கும்போது சௌலப்பியம் வெளிப்படுகின்றது.

ஈசுவரன் ஒவ்வொரு பொருளிலும் தன்னை ஆன்மாவாய் அமைத்துக் கொண்டிருத்தலே சௌலப்பியம் ஆகும். ஒவ்வொரு பொருளின் உட்புக்கிருந்து அதனை நியமித்துக் கொண்டு போதலே ஆன்மாவாய் இருத்தலுக்குப் பொருளாதலால் இங்குப் பரத்துவம் வெளிப்படுகின்றது.

3. நாராயணனுடைய எல்லா உலகங்களுக்கும் அடைக்கலமாக இருக்கும் திருத்தாமரை (அடிகள்)

இந்தச் சிறப்பு திருவாய்மொரியின் மூன்றாம் பத்தால் தெளிவாகின்றது. திருவேங்கடமுடையானுக்கு அடிமை செய்ய வேண்டும் என்பதை விளக்கம் திருவாய்மொழியில் (3.3) ஒன்பதாம் பாசுரம்:

(1). ஒயும் மூப்பும் பிறப்பு இறப் புப்பிணி
வீயு மாறுசெய் வான்திரு வேங்கடத்து
ஆயன் நாள்மல ராம்அடித் தாமரை
வாயுள் ளும்மனத் துள்ளும்வைப் பார்கட்கே (9)

9.முமுட்சு-100



(ஒயும்மூப்பு - ஓய்வை விளைவிக்கின்ற கிழத்தனம்; வீயும் ஆறு - தொலையும் வகை; செய்வான் - செய்தருள்வான்; ஆயன் - கிருட்டிணன்; தாமரைநாள் மலர் ஆம் - அப்போ தலர்ந்த செந்தாமரைப் பூப்போன்ற; அடி - திருவடிகள்; வாய் - வாக்கு; மனம் - நெஞ்சு; வைப்பார்க்கு - வைத்துக் கொள்பவர்களுக்கு)

திருமலை யொன்றே நம் வினை ஓய்வதற்குப் போதுமென்றார் மேல் இரண்டு பாசுரங்களாலே; அந்தத் திருமலை தானும் பூர்த்தியாக வேண்டும் என்பதில்லை. அதில் ஏசுதேசமே போதுமென்கின்றார் இப்பாசுரத்தில். 'ஏகதேசம்' என்றது திருவேங்கடமுடையானை. ''வடமா்மலை உச்சியை'' (பெரி.திரு. 7.10:3) என்பார் திருமங்கை மன்னன்.

இந்தப் பாசுரத்தில் ''நாள் மலராம் அடித்தாமரை'' என்பது நமக்கு வேண்டிய பகதி. ''செவ்விப்பூவைத் தலையிலே வைத்தலைப் போன்றிருப்ப தொன்றாதலின் 'நாள்மலராம் அடித்தாமரை' என்கின்றார்; அவன் கால் காண 'மூப்புப் பிறப்பு இறப்பு' என்கின்ற இவையெல்லாம் அழியும் என்றபடி, ''இதனால், விரோதி போவதற்கு இவ்வேப்பங் குடிநீரையாயிற்று குடிக்கச் சொல்லுகின்றது என்கின்றார் என்படி'' என்பது ஈட்டாசிரியரின் விளக்கம்.

'ஆன்மாக்கள் அனைத்தும் அவனே' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (3.4) மூன்றாம் பாசுரம்:

(2). பங்கயக் கண்ணன் என்கோ?
பவளச்செவ் வாயன் என்கோ?
அங்கதிர் அடியன் என்கோ?
அஞ்சன வண்ணன் என்கோ?
செங்கதிர் முடியன் என்கோ?
திருமறு மார்பன் என்கோ?
சங்குசக் கரத்தன் என்கோ?
சாதிமா ணிக்கத் தையே! (3)

(பங்கயம் - தாமரை (சேற்றில் தோன்றியது; பங்கயம் - சேறு). அம்கதிர் அடியன் - அழகையும் ஒளியையும் உடைய திருவடிகளை உடையவன்; என்கோ - என்பேனோ; அஞ்சனம் - மை; கிரீடத்தையுடையவன்; திரு - பிராட்டி; மறு - ஸ்ரீவத்சம் என்கின்ற மயிர்ச்சுழி)

எம்பெருமான் பிரபஞ்ச சரீரகனாய் இருக்கும்படியை முதலிரண்டு பாசுங்களில் கூறிய ஆழ்வார், இப்பாசுரத்தில் தனக்கு உரிய திருமேனியோடு சேவை சாதிக்கின்ற அப்பேருமானை அநுபவிக்கின்றார்.

ஈண்டு நமக்கு வேண்டிய பகுதி 'அங்கதிர் அடியன்' என்பது. இதன் பொருள்: ''நோக்குக்கும் புன்முறுவலுக்கும் தோற்றார் விழும் நிலத்தைச் சொல்கின்றது''. நிலம் - திருவடி.

இப்பாசுரத்தில் முறை வைப்பிற்கு வியாக்கியாதா அருளிச்செய்யும் விசேடப் பொருள் கற்பார்க்குக் கழிபேரின்பத்தைப் பயப்பதாகும் (ஈட்டுரை கண்டு மகிழ்க).

''அர்ச்சாவதாரமே எளிது'' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (3.6) நான்காம் பாசுரம்:

(3). 'வைமின் நும்மனத் தென்று யான்உரை
கின்ற மாயவன் சீர்மையை
எம்ம னோர்கள் உரைப்ப தென்? அது
நிற்க, நாடொறும் வானவர்
தம்மை யாளும் அவனும், நான்முக-
னும்ச டைமுடி அண்ணலும்
செம்மை யாலவன் பாத பங்கயம்
சிந்தித்து ஏத்தித் திரிவரே. (4)

(மனம் - நெஞ்சம்; நீர்மை - சீல குணம்; எம்மனோர்கள் - என்னைப் போன்றவர்கள்; நிற்க - கிடக்க; வானவர் தம்மை ஆளும் அவன் - இந்திரன்; செம்மையால் - முறைமை தவறாது; அவன் - எம்பெருமான்; பாத பங்கயம் - திருவடித்தாமரை; நாள்தொறும் - எப்போதும்; ஏத்தி - துதித்து; திரிவார் - இதுவே காரியமாக இருப்பர்).

அபிமானம் மிக்கவர்களாக பிரமன், உருத்திரன் முதலாயினோர் கட்கும் தடையின்றியே புகுந்து பற்றும்படியாயிருக்கின்ற சீல குணத்தைப் பேசுகின்றார் இதில்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி **'அவன் பாதபங்கயம்'** என்பது. ''தங்களையே கடவுளாக மதித்திருக்கின்ற இந்திரன் பிரமன் உருத்திரன் முதலானோரும் கூட வேறொரு பயனையும் கருதாதவரைப் போல வந்து அப்பெருமானுடைய திருவடிகளைப் பணிகின்றார்கள். அன்னவர்களம் வந்து பணியலாம்படி அவன் தன்னை அமைத்துக் கொடுக்கின்றான் என்றால், இஃது எப்படிப்பட்ட சீல குணம் என்று பாருங்கள்'' என்கின்றார்.

இதே திருவாய்மொழியில் பத்தாம் பாசுரம்:

(4). கடல்வண் ணன்கண் ணன்விண்ண வர்கரு
மாணிக் கம்தனது ஆருயிர்
படஅ ரவின்அ ணைக்கி டந்த
பரஞ்சு டர்பண்டு நூற்றுவர்
அடவ ரும்படை மங்க ஐவர்கட்கு
ஆகி வெஞ்சமத்து அன்றுதேர்
கடவி யபெரு மான்க னைகழல்
காண்பது என்றுகொல், கணகளே! (10)



(வண்ணன் - நிறத்தையுடையவன்; விண்ணவர் - பரமபதத்தில் உள்ளவர்; கருமாணிக்கம் - நீலமணி; ஆர்உயிர் - அருமையான உயிர்; அரவு - பாம்பு (ஆதிசேடன்); இன்அணை - இனிய படுக்கை; பரம்சுடர் - பரஞ்சோதி; பண்டு - முன்பொருகால்; அடவரும்- கொல்வதற்குத் திரண்டு வருகின்ற; மங்க-தொலையும்படியாக; வெம்சமத்து - கொடிய பாரதப் போரில்; பெருமான் - எம்பெருமான்; கனைகழல் - ஒலிக்கின்ற திருவடிகள்; என்று கொல் - என்றைக்கோ).

ஆழ்வார் தாம் உபதேசிக்கத் தொடங்கின சௌலப்பிய ஊற்றத்தை அர்ச்சாவதார பர்யந்தமாக அருளிச் செய்து முடித்த, தாம் அசல்பட்ட துறையான கிருட்டிணாவதாரத்தை ஆசைப்படுகின்றார் இப்பாசுரத்தில்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி **'அன்று தேர்கடவிய பெருமான் கனை கழல்'** என்பது ''சேனாதூளியும் உழவு கோலும் பிடித்த சிறுவாய்க் கயிறும் தேருக்குக் கீழே தொங்கவிட்ட திருவடிகளும் அதிலே சாத்தின சிறு சதங்கையுமாய்ச் சாரதி வேஷத் தோடே நின்றபோதைத் திருவடிகளில் ஆபரணத்தின் ஒலி செவிப் படவும் அவ்வடிவைக் காணவும் இவர்க் குண்டான ஆசை''[10]. இந்த நிலையைக் காண ஆசைப்படுதல்.

**''கரணங்களும் தாமும் பெருவிடாய்ப்பட்டு பேசுதலை''** விளக்கும் திருவாய் மொழியில் (3.8) முதல் பாசுரம்:

(5). முடியானே! மூவுலகுந் தொழுதுஏத் தும்சீர்
அடியானே! ஆழ்கடலைக் கடைந்தாய்! புள்ளூர்
கொடியானே! கொண்டல்வண் ணா! அண்டத்துஉம்பரில்
நெடியானே! என்று கிடக்கும்என் நெஞ்சமே! (1)

(முடி - திருவபிடேகம்; ஏத்தும் - துதிக்கும்; சீர் - சிறப்புள்ள; அடியான் - திருவடிகளையுடையவன்; புள் - கருடன்; கொண்டல் - மேகம்; அண்டத்து உம்பர் - பரமபதம்; என்று கிடக்கும் - என்று அநுசந்தித்து உருகிக் கிடக்கும்)

தம்முடைய திருவுள்ளம் எம்பெருமானைக் காண வேண்டும் என்று ஆசைப்பட்டுப் பெறாமையாலே நிர்வேதம் கொண்டுகிடக்கிற படியை அருளிச்செய்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகதி **'மூவுலகும் தொழு தெத்தும் சீரடியான்'** என்பது. 'குணமுள்ளவர்களைக் கைப்பற்றுவது, குற்றமுள்ளவர்களைக் கைவிடுவது என்ற கொள்கை கொளாமை இல்லாதவனாதலால் குணவான்களோடு துட்டர்களோடு வாசியற அனைவரும் வந்து பணிந்து ஏத்தப்பெற்ற திருவடிகளையுடையவன் எம்பெருமான். அந்த நிலைமையிலே தமது திருவுள்ளம் ஈடுபட்டிருக்கும் படியைக் கூறுகின்றார் ''பொங்கு ஓதம் சூழ்ந்த புவனியும் விண் உலகும், அங்கு ஆதும் சோராமே ஆள்கின்றமை''க்கு (நாச் திரு. *11:3*) இலட்சணமாகக் கவித்த திருவபிடேகத்திலே கண்ணைச் செலுத்தினால் உடனே திருவடிகளிலே விழும்படியாயன்றோ இருப்பது?

*10. முமுட்சு 218 காண்க.*

### 4. அவற்றினை அடைவிக்கும் தன்மை

இந்தச் சிறப்பு திருவாய்மொழியின் நான்காம் பத்தால் தெளிவாகின்றது. ''காதல் கை கூடாது வருந்தும் தலைமகள் நிலை கண்டு தாய் இரங்கல்'' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (4.2) எட்டாம் பாசுரம்:

(1). கொம்புபோல் சீதை பொருட்டு இலங் கைநகர்
அம்பெரி உய்த்தவர் தாளிணை மேலணி
வம்பவிழ் தண்ணந் துழாடய்மலர்க் கே இவள்
நம்புமால் நானிதற்கு என்செய்கேன் நங்கைமீர்? (8)

(கொம்பு போல் - பூங்கொடி போன்ற; அம்பு எரி - அம்புகளில் நின்றும் கிளம்பும் எரியை; உய்த்தவர் - செலுத்திய இராம பிரான்; தாள் இணைமேல் - உபயபாதங்கள் மீது; அணி - சாத்தின; வம்பு அவிழ் - பரிமளம் ளிப்படும்; இவள் நம்பும் - இவள் ஆசைப்பட நின்றாள்)

இது தாய்ப்பாசுரம். ''சீதாப் பிராட்டிக்காக இலங்கை நகர் பாழாகப் படை பொருத பெருமாளது திருவடிகளில் கிடக்கும் திருத்துழாயை என் மகள் விரும்பா நின்றாள்'' என்கின்றாள்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி ''இலங்கை நகர் அம்பெரி உய்த்தவர்'' என்பது. ''இலங்கை நகர் - சூரிய சந்திரர்கள் சஞ்சரிப்பதற்குப் பயப்படும் ஊர்; அம்பு எரி உய்த்தவர் - அம்பாகிய நெருப்பைப் புகச் செய்தவர்; சக்கரவர்த்தித் திருமகன் இதனைக் கை தொட்டுச் சிட்சித்து (கற்பித்து)க் குணவானாக்கிப் பின்பேயன்றோ போகவிட்டது; ஆகையாலே கேவலாக்னி புகுதற்குக் கூசும் ஊரிலே தன் வாய் வலியாலே புக்கதாயிற்று.

'பிரிவு ஆற்றாத போலிப் பொருள்களைக் கண்டு வருந்தும் தலைவியின் நிலையைத் தாய் உரைத்தல்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (4.4) பல சுருதிப்பாசுரம் இது:

(2). வல்வினை தீர்க்கும் கண்ணனை
வண்குரு கூர்ச்சட கோபன்
சொல்வினை யால்சொன்ன பாடல்
ஆயிரத் துள்ளிவை பத்தும்
நல்வினை யென்றுகற் பார்கள்
நலனிடை வைகுந்தம் நண்ணி
தொல்வினை தீரஎல் லாரும்
தொழுதெழ வீற்றிருப் பாரே (11)

(வல்வினை - சகல பாவங்கள்; தீர்க்கும் - போக்கும்; வண் - வளப்பமுள்ள; சொல்வினை - சொல்லும் தொழில் வன்மை; நல்வினை - நல்ல செய்கை; நலன் - பகவத நுபமாகிய ஆனந்தத்தை உடைய; தொல்வினை - அநாதியான பாவங்கள்)



இத் திருவாய்மொழி கற்பவர்கள் எல்லாத் துன்பங்களும் தொலையப் பெற்றுத் திருநாட்டிலே நித்திய சூரிகள் ஆதரிக்கும்படியான பெருமை பெற்று மகிழ்வார் என்பது பயன்.

இப்பாசுரத்தில் 'வல்வினை தீர்க்கும் கண்ணனை' என்பது நமக்கு வேண்டிய பகுதி. 'அடியார்களுடைய பிரிவிற்குக் காரணமான மகா பாவத்தைப் போக்கும் தன்மையனான கிருட்டிணனை' என்பது இதன் பொருள். இதனால் பெற்றவர்கள் கைவிட்டால் பிடித்தவர்கள் கை விடார்கள் என்பதனைத் தெரிவித்தவாறு.

பெற்றார் பெற்றுஒழிந்தார்
பின்னும்நின்று அடியேனுக்கு
உற்றானாய் வளர்ந்துஎன்
உயிராகி நின்றானை

என்ற பெரிய திருமொழிப் (8.9:7) பாசுரம் ஈண்டு அநுசந்தித்தல் தகும்.

இந்தப் பாசுரத்தில் 'தொல்வினை தீர' என்றும் வருகின்றது. 'அநாதியாய் வருகின்ற அவித்யை முதலானவைகள் தீர்ந்து' என்பது இதன் பொருள். அவித்யை ஞானத்திற்கு விரோதமாக இருப்பது.

'எம்பெருமானின் இருப்பைக் கண்டு மகிழ்வது' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (4.5) இரண்டாம் பாசுரம்:

(3). மைய கண்ணாள் மலர்மேல்
உறைவாள் உறைமார்பினன்,
செய்ய கோலத் தடங்கண்ணன்,
விண்ணோர்பெருமான் தன்னை,
மொய்ய சொல்லால் இசைமாலைகள்
ஏத்தி, யுள்ளப்பெற்றேன்
வெய்ய நோய்கள் முழுதும்
வியன்ஞாலத்து வீயவே (2)

(மைய கண்ணாள் - மை எழுதப்பெற்ற கண்ணையுடையவள்; உறை - நித்தி வாசம் செய்யப்பெற்ற; செய்ய - சிவந்த; கோலம் - அழகு; தட - விசாலமான; விண்ணோர் - நித்திய சூரிகள்; மொய்ய - செறிந்த; வியன் - அகன்ற; ஞாலம் - புவி; வெய்ய - கொடிய; வீய - நசிக்கும்படியாக; ஏத்தி - துதித்து; உள்ளப் பெற்றேன் - நெஞ்சாலே அநுபவிக்கப் பெற்றேன்)

'மேன்மைக்கு அடியான பிராட்டி சம்பந்தத்தையுடையவனை சகலதாபங்களும் தீரும்படி புகழப் பெற்றேன்' என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் 'வெய்ய நோய்கள் முழுவதும் வியன் ஞாலத்து வீய' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். ''அநுபவித்தே அற வேண்டும்படியான கருமபந்தங்கள் அனைத்தும் தொலைந்தொழிய''

என்பது இதன்பொருள். இன்னாருடைய கரும பந்தங்கள் என்று பிரித்துச் சொல்லாமையாலே, உலகத்திலேயே கருமபந்தங்கள் இல்லையாம்படி செய்துவிட்டமை தோன்றுகின்றது 'வியன் ஞாலத்து' என்ற தொடரால். இங்கே நம்பிள்ளையீடு: ''பனை நிழல் போலே தம்மை ஒருவரையும் நோக்கிக் கொள்ளுகையன்றிக்கே, ஊரும் நாடும் உலகமும் தம்மைப் போலேயாம்படி தாம் இருந்த உலகத்தில் உண்டான கருமங்கள் முழுவதும் அழிந்தன'' என்னுதல். அங்ஙனன்றிக்கே, '''வியன் ஞாலம்' என்று வேறு ஒரு தேசம் போலே இருக்கச் சொல்லுகையாலே, தாம் 'வீற்றிருந்தேழுலகு' (4.5) என்னும் இத்திருவாய்மொழியை அருளிச் செய்கிறது பரமபதத்திலே இருந்தது போலே காணும்'' என்று அருளிச் செய்வர். 'பாவனையின் மிகுதியாலே தாம் பரமபதத்திலே இருக்கின்றராய் இந்த உலகில் தம்முடைய சம்பந்தம் உடையவர்களுடைய பாவங்கள் அழியும்படி பாடினேன்' என்கின்றார்.

இதே திருவாய் மொழியில் நான்காம் பாசுரம்:

(4). மேவி நின்று தொழுவார்
வினைபோக மேவும்பிரான்,
தூவி யம்புள் ளுடையான்,
அடலாழியம் மான்தன்னை,
நாவிய லாலிசை மாலைகள்
ஏத்தி, நண் ணப்பெற்றேன்;
ஆவியென் னாவியை யானறி
யேன்செய்த வாற்றையே (4)

(மேவிநின்று-நெஞ்சு பொருந்தியிருந்து; தொழுவார் - அநுபவிப்பார்; வினை போக - பாவங்கள் நசிக்கும்படி; மேயும் - அவர்களோடு கலக்கின்ற; தூவி-சிறகுகள்; புள் - கருடன்; அடல் ஆழி-போர்வல்ல திருவாழி; நாஇயலால் - நாவின் தொழிலாலே; ஏத்தி - துதித்து; நண்ணப்பெற்றேன் - நண்ணுதலைப் பெற்றேன்; ஆவி-எனக்கு அந்தராத்ம பூதனான எம்பெருமான்; என் ஆவியை - என்னுடைய ஆன்மாவை)

'நித்தியர்களின் நாதனான எம்பெருமான் நித்திய சம்சாரியான என்பக்கலில் பண்ணியருளின மகோபகாரம் என்னே!' என்று ஈடுபடுகின்றார் ஆழ்வார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி **'மேவி நின்று தொழுவார் வினை போகமேவும்'** என்பது. இதனை விளக்குவோம். எம்பெருமானுக்குப் **'பிராணதார்த்திகரன்'** என்று ஒரு திருநாமம் உண்டு. அதனை முதலடியில் அநுசந்திக்கின்றார். மேவி நின்று தொழுகை யாவது-வேறு பயன்களைக் கருதாமல் தன்னையே விரும்பித் தொழுகை. 'வழுவாவகை நினைந்து வைகல் - தொழுவார்' (முதல் திருவந் 26) - பரமை காந்திகளான பாகவதர்கள் - பகவத் பக்தர்கள்- இவர்கள் அவனையே பயனாகக் கொண்டு தொழுபவர்கள்.



இன்றுவந்து இத்தனையும்
அமுதுசெய் திடப்பெறில்நான்
ஒன்றுநூ றாயிரமாக்
கொடுத்துப் பின்னும் ஆளும்செய்வன் (நாச். திரு. 9:7)

என்றவாறு தொழுபவர்கள் என்று கொள்ளலாம். பாவவிமோசன மாகையாலே தொழுகின்றார்கள் என்று கொள்ள வேண்டும். வேறு பயன்களை விரும்பாமல் தொழுகின்றனர். மேவி நின்று தொழுபவர்கட்கு வினையுண்டோ? என்னில்: ஆஸ்ரயண விரோதி கழிந்ததேயாகிலும், பாபத்திற்குக் காரணமான உடல் இருக்கையாலே வேறு பயன்களில் மனம் செல்லுகைக்கு அடியான பாபம் உண்டாவாற்குக் காரணம் உண்டல்லவா? அத்தகைய பாவங்கள் போகும்படி என்பதாகக் கருத்து எனக் கொள்ள வேண்டும்.

**'திருமாலை வந்தருளுமாறு தம் குறை கூறி வருத்தி அழைத்தல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (4.7) ஏழாம் பாசுரம்:

(5). அறிந்த றிந்த தேறித்
தேறி யான்என தாவியுள்ளே
நிறைந்த ஞான மூர்த்தி
யாயை நின்மல மாகவைத்துப்
பிறந்தும் செத்தும் நின்றிடறும்
பேதைமை தீர்ந்தொ ழிந்தேன்
நறுந்து ழாயின் கண்ணி அம்மா!
நானுனைக் கண்டு கொண்டே (7)

(அறிந்துஅறிந்து - உன்னுடைய உபாயத்துவத்தையும் உபயேத்துவத்தையும் நன்றாக அறிந்து; தேறித்தேறி - மிகவும் தெளிவுடையவனாகி; ஆவியுள்ளே - நெஞ்சுக்குள்ளே; நிறைந்த ஞானமூர்த்தியை - முற்றும் நிறைந்த ஞான சொருபனான உன்னை; நின்மலமாக வைத்து - விசதமாக அநுபவித்து; பிறந்தும் செத்தும் - பிறப்பதும் இறப்பதுமாக இருந்து; இடறும் படுகின்ற; பேதைமை - அஞ்ஞான சம்சாரம்; தீர்த்து ஒழிந்தேன் - தீர்த்துக் கொள்ளப் பெற்றேன்; நறுந்துழாய் - பரிமளம் மிக்க திருத்துழாய்; கண்ணி - மாலை; நான் உன்னைக் கண்டு கொண்டு - நான் உன்னை மனக்கண்ணால் சேவிக்கப்பெற்று)

'ஆழ்வீர். உமக்கு நான் ஓர் உபகாரமும் செய்யவில்லை போலே வருந்துகின்றீரே; நன்கு ஆராய்ந்து பாரும்; எந்த உபகாரங்கள் என்னால் பெற்றுள்ளீர் என்பதை அறிந்து சொல்லும்' என்று எம்பெருமான் வினவுவதாகக் கொண்டு, 'பிரானே, சில உதவிகளை நீர் செய்ய நான் பெற்றதுண்டு; அடியோடு ஒன்றும் இல்லை என்று சொல்லவில்லை; பெற்ற அளவு போதாது என்று சொல்லத் தொடங்கி, பெற்ற அளவு இன்னது' என்கிறார் இப்பாசுரத்தில்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டியது **'பிறந்தும் செத்தும் நின்றிடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்'** என்பதாகும். 'சாவதும்

பிறப்பதுமாய் தடுமாறுகின்ற அறிவுக்கேடு தவிரப் பெற்றேன்' என்பது இதன் பொருள். அதாவது, ''பொய்ந்நின்றஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும், இன்னின்ற நீர்மை இனியாம் உறாமை'' (திருவிரு-1) என்று விரும்பியதைப் பெற்றேன் என்பதாம்.

**'உலக இயற்கையில் விருப்புற்ற ஆழ்வார் திருவடி சேர்க்குமாறு எம்பெருமானை வேண்டுதல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் **(4.9) ஏழாம்** பாசுரம்:

(6). ஆயே ! இவ் வுலகத்து
நிற்பனவும் திரிவனவும்
நீயே;மற் றொருபொருளும்
இன்றிநீ நின்றமையால்,
நோயேமூப் பிறப்பிறப்புப்
பிணியேஎன் றிவைஒழிய,
கூவிக்கொள் அடியேனை;
கொடுவுலகம் காட்டேலே (7)

(நிற்பன - நிலைப் பொருள்; திரிவன - நிலையில் பொருள்; நீயேயாய் - நீயாகவே; கூவிக்கொள் - அழைத்துக்கொள்; கொடு உலகம் - கொடிய இவ்வுலகம்; காட்டேல் - இனிமேலும் காட்டவேண்டா)

''எல்லாப் பொருள்களும் நீ இட்ட வழக்கான பின்பு நீயே உன்னைக் கிட்டும் வழிகாட்டியருளவேண்டும்'' என்கின்றார்.

இப்பாசுரத்தில் **'நோயே மூப்பு பிறப்பு இறப்பு பிணி என்று இவை ஒழிய'** என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். சரீரத்துககு வந்தவற்றுக்குச் சரீரியான ஆன்மா இன்புறுதல் துன்புறல் செய்வாய் நீயேயாம்படி சம்பந்தமுண்டாயிருந்த பின்பு, பிறவிகாரணமாக வருகின்ற இந்த விசனங்களைக் கழித்து. நோயும் பிணியும் - ஆதிவியாதிகள். அஃதாவது ஆதியும் வியாதியும் என்றபடி. ஆதி - மனோவியாதி; வியாதி - உடல் நோய். இவை யெல்லாம் நீங்கும்படி நீயே அழைத்துக் கொண்டருள வேண்டும் என்கின்றார்.

இதே திருவாய் மொழியில் **ஒன்பதாம்** பாசுரம்:

(7). கூட்டுதிநின் குரைகழல்கள்;
இமையோரும் தொழாவகை செய்து,
ஆட்டுநீ அரவணையாய்!
அடியேனும் அஃதறிவன்;
வேட்கையெல்லாம் விடுத்துஎனைஉன்
திருவடியே சுமந்துழலக்



கூட்டரிய திருவடிக்கண்
கூட்டினைநான் கண்டேனே (9)

(கூட்டுதி - சேர்த்துக கொள்ளுகின்றாய்: குரை கழல்கள் - ஆபரணஒலி பொருந்திய உனது திருவடிகள்; இமையோர் - தேவர்கள்; தொழாவகை செய்து - கண்டு அநுபவியாதபடி செய்து; ஆட்டுதி - அலைக்கின்றாய்; அஃது - இப்படியே எளியனாயும் அரியனாயும் இருக்கும் தன்மையை; என்னை - எனக்குண்டான; வேட்கை எல்லாம் - விருப்பங்கள் எல்லாவற்றையும்; விடுத்து - கழித்து; சுமந்து உழல - தலையில் சுமந்து திரியும்படி; கூட்டரிய திருவடிக்கண் - அரிய திருவடிகளிலே; கூட்டினை - சேர்த்துக் கொண்டாய்; கண்டேன் - நேரே அநுபவித்தேன்)

''இவர் சம்சாரத்தை நினைத்தமையால் வந்த விசனம் எல்லாம் தீரும்படி திருநாட்டில் இருந்த இருப்பைக் காட்டியருள, '' கண்டு அநுபவிக்கப் பெற்றேன்'' என்கின்றார்.

இப்பாசுரத்தில், '' வேட்கை யெல்லாம் விடுத்து - கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை'' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். இதன் பொருள்: ''இவ்வுலகில் என்னுடைய ஆசைக்கு இலக்காகாத பொருளே இல்லை; கண்டபொருள்களிலெல்லாம், 'எனக்கு எனக்கு' என்றே ஆசை வைத்துப் போந்தேன்; அந்த ஆசைகளையெல்லாம் விடுத்தருளினாய். ''யாதானும் பற்றி நீங்கும்'' விரதத்தை நல்வீடு செய்திலையோ?'' (திருவிருத் 95). அதுவன்றி உன்திருவடியே சுமந்து உழல் - பரதாழ்வானுக்கு மரவடியைகொடுத்து அவனக்கு மனநிறைவு பண்ணியது போலன்றி உன் திருவடிகளையே என் தலை மீது வைத்தருளினாய். இதைக் கேட்டார்வாய்க் கேட்டு நான் சொல்லுகின்றேன் அல்லை; அநுபவத்தாலே சொல்லுகின்றேன்'' என்கின்றார்.

'செல்வம் நிலையாமையும் திருமாலடியின் நிலை பேறும்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் **(4.1)** பல சுருதிப்பாசுரம்:

(8). அஃதே உய்யப் புகுமாறென்று
கண்ணன் கழல்கள்மேல்
கொய்பூம் பொழில்சூழ் குருகூர்ச்
சடகோபன் குற்றேவல்
செய்கோலத் தாயிரம் சீர்தொடைப்
பாடல் இவைபத்தும்
அஃகாமற் கற்பவர் ஆழ்துயர்
போய் உய்யற் பாலரே (11)

(உய்யபுகும்ஆறு- உய்வதற்கு உபாயம்; அஃதே என்று - (திருநாரணன் தாள்களே) என்று அறுதியிட்டு; கண்ணன்-எம்பெருமானுடைய; கழல்கள் மேல் - திருவடிகள்பற்றி; கொய்பூ-கொய்தற்குரிய மலர்கள்; குற்றேவல் - வாசிக கைங்கரிய உருமாயும்; செய்கோலத்து - எல்லாவித அலங்கார சம்பந்மாயுமுள்ள; சீர் தொடை பாடல் - திருக்குணங்களை இட்டுத்தொடுத்த மாலை போன்ற பாசுரத்தில்; அஃகாமல் - குறையாமல்; கற்பவர் - ஓதுபவர்கள்; ஆழ்துயர் போய் - ஆழ்ந்த துயர் நீங்கப் பெற்று; உய்யற்பாலர் - உய்விக்கும் தன்மையை உடையவராவர்)

இப்பாசுரத்தில், 'அஃதே உய்யப் புகுமாறு என்று கண்ணன் கழல்கள் மேல்' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். 'திருநாரணன் தாள்கள்' என்று நான் சொன்ன அதுவே உய்வதற்கு உபாயமும் (=வழி) உபேயமும் (=பேறும்) என்று 'கண்ணனைத் தாள் பற்றி' (திருவாய் 3.10:10) என்று தாமும் சொல்லி, ''கண்ணன் கழல்கள் நினைமினோ'' (திருவாய். 4.1:3) என்று பிறர்க்கும் உபதேசித்து நின்றதையே ஈண்டு அருளிச்செய்கின்றார்.

**'எம்பெருமான் சேர்க்கையால் பெற்ற இன்பம்'** என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (4.3) **பலசுருதிப் பாசுரம்:**

(9). உய்வு பாயம் மற்றின்மை
தேறிக் கண்ணன் ஒண்கழல்மேல்
செய்ய தாம ரைப்பழனத்
தென்னன் குருகூர்ச் சடகோபன்
பொய்யில் பாடல் ஆயிரத்துள்
இவையும் பத்தும் வல்லார்கள்
வையம் மன்னி விற்றிருந்து
விண்ணும் ஆள்வர் மண்ணூடே (11)

(மற்று - வேறு வழியினால்; உய்வு உபாயம் இன்மை - தரிக்க விரகில்லாமையை; தேறி - துணிந்து; ஒண்கழல்கள் - அழகிய திருவடிகள்; செய்ய தாமரை - செந்தாமரை; பழனம் - வயல்; பொய் இல் பாடல் - உண்மை பொருந்திய பாசுரம்; வல்லார்கள் - ஓதவல்லவர்கள்; மன்னி - நிலைபெற்று; மண்ணூடே - இந்நிலத்திலேயே; விண்ணும் - பரமபதத்தையும்; ஆள்வர் - பெறுவர்.)

'இத்திருவாய் மொழியை ஓதுபவர்கள் உபய விபூதியையும் தாம் இட்ட வழக்காக நிர்வகிக்கப் பெறுவர்' என்கின்றார்.

இந்தத் திருவாய்மொழியில் **''உய்வுபாயம் மற்றின்மை தேறிக் கண்ணன் ஒண் கழல்கள் மேல்''** என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். இவர் சர்வேசுவரனுடைய காதல் குணத்தைப் பேசதொடங்கியது, 'பேசித் தலைக்கட்டலாம் என்ற எண்ணத்தினாலன்று; இங்ஙனம் பேசினாலல்லது வேறொன்றால் தரிக்க வொண்ணாமையாலே தெளிந்து பேசிற்று' என்பதை வெளியிடுகின்றார்.

இந்த ஒன்பது பாசுரக் குறிப்புகளினால் வேண்டாதவற்றை நீக்கி விரும்பியவற்றை அடைவிக்கும் தன்மை விளக்கப் பெற்றதாகின்றது.

### 5. அதற்குத்தகுவதாய் சேதநன்செய்யவேண்டிய பிரார்த்தனையோடு கூடிய செயல்

இந்தச் சிறப்பு திருவாய்மொழி ஐந்தாம்பத்தால் தெளிவாகின்றது. **'வானமாமலைப் பெருமானது அருளை வேண்டல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (5.7)[11] இரண்டாம் பாசுரம்.

11. இத்திருவாய் மொழி ஆசிரியத் துறையாலானது



(1). அங்குற்றேன் அல்லேன்; இங்குற்றேன் அல்லேன்;
உன்னைக் காணும் அவாவில் வீழ்ந்துநான்
எங்குற் றேனும்அல் லேன்; இலங்கைசெற்ற அம்மானே!
திங்கள் சேர்மணி மாடம் நீடு
சிரீவர மங்கல நகருறை
சங்கு சக்கரத் தாய்; தமி யேனுக் கருளாயே (2)

(நான் - அடியேன்; அங்குற்றேன் அல்லேன் - நித்திய சூரிகளில் சேர்ந்தவன் அல்லேன்; இங்குற்றேன் அல்லேன் - சம்சாரிகள்படியும் உடையேன் அல்லேன்; உன்னைக்காணும் அவாவில் வீழ்ந்து - உன்னைக்காணும் ஆசையில் படிந்தவனாகி; எங்குற்றேனும் அல்லேன் - ஒருவர் பிடியிலும் சேராதவனாய் நின்றேன்; செற்ற - தொலைத்த; அம்மானே - சுவாமியே; திங்கள் - சந்திரன்; நீடு - விசாலமான; உறை - வாசம் செய்யும்.)

'அம்மானே! திருவாழி திருச்சங்கு உடையவனே! நித்திய சூரிகளில் சேர்ந்தவனும் அல்லன்; சம்சாரிகளில் சேர்ந்தவனும் அல்லன்; உன்னைக்காணும் ஆசையினால் ஒருபடியிலும் சேராதவனாக நின்றேன்; தமியேனுக்கு அருளாய்' என்கின்றார்.

இந்த பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி 'தமியேனுக்கு அருளாயே' என்பதாகும்.

தமியேற்கு - உன்னை யொழியத் துணையில்லாத அடியேனுக்கு. மேலும், உன்னைவிட்டுப் பிரிந்திருக்கின்ற எனக்கு என்றும், புகல் ஒன்றும் இல்லாத எனக்கு என்றும், சம்சாரிகளில் துணையில்லாத எனக்கு என்றும் மூன்று பொருள் அருளிச் செய்த படியாம். ஆயின், செய்ய வேண்டுவது ஏன்? என்ன:' அருளாயே-என் வெறுமையும் உன் நிறையும் அறிகைக்கு, நீ 'மயர்வற மதிநலம்' அருளிச் செய்தது இன்று குடி போயிற்றோ? அன்று நான் விரும்பாதிருக்க அருளின நீ. விரும்புவதற்குத் தகுதியைப் பிறப்பித்துப் போக வேண்டுமோ? ருசியை உண்டாக்குவார் ஒருவரும், உபாயத்தை அநுட்டிக்கிறவர் ஒருவருமாகவா இருப்பது? நின்னருளே புரிந்திருக்கின்ற எனக்கு அருளாயாகில் பின்னை யாருக்கு வேறு அருள இருக்கின்றாய்?'

இதே திருவாய்மொழியில் பத்தாம் பாசுரம்:

(2). ஆறு எனக்குநின் பாதமே சரணாகத் தந்தொழிந்
தாய் உனக்கு ஓர்கைம்
மாறு நானொன் றிலேன்; என தாவியும் உனதே;
சேறு கொள்கரும் பும்பெருஞ் செந்நெலும்மலி
தண்சிரீ, வர மங்கை
நாறு பூந்தண் துழாய்முடி யாய்! தெய்வ நாயகனே! (10)

(ஆறு - உபாயம்; பாதம் - திருவடிகள்; சரணாக - உபாயமாக; கைம்மாறு - பதில் உபகாரம்; ஆவி-ஆன்மா; உனதே-உன்னுடையது; நாறு பூ தண்துழாய்-பரிமளம் மிக்க திருத்துழாய்)

ஏற்கெனவே தமக்குக் கிடைத்திருக்கின்ற விருப்பத்தின் சிறப்பிற்கு நன்றி அநுசந்தானம் பண்ணுகின்றார் இப்பாசுரத்தில்.

இப்பாசுரத்தில் **‘ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத்தந் தொழிந்தாய்’** என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். என்க்கு - வேறு கைம்முதல் இல்லாத எனக்கு உபாய உபேயங்கள் இரண்டும் உன்திருவடிகளேயாம்படி செய்து தந்தாய் என்கின்றார். இது பிள்ளானின் நிர்வாகம். ஆறு-வழி; வழி-உபாயம். **நின்பாதமே** என்ற ஏகாரத்தாலே ஏகபதத்தை நினைப்பதாகும். 'ஏகபதம்' என்றது சரமசுலோகத்திலுள்ள ‘ஏகம்’ என்ற பதத்தைக்குறித்தவாறு. அங்கு ‘மாம் ஏகம்’ என்பதற்கு ‘என்னையே’ என்பது பொருள். ‘ஏகம் என்ற சொல் ஏகாரத்தின் பொருளில் வந்துள்ளது. “சரண்-திருவடிகளை; ஆறாக எனக்குத் தந்தொழிந்தாய்; நின்பாதமே எனது ஆவியும் உனதே” என்று கூட்டி நின்பாதமே என்பதனைச் சமதமமாக்கி நிர்வகிப்பர் ஆப்பான் திருவழுந்தூர் அரையர்.

**‘ஆரா அமுதாழ்வார் பேறுகளைத் தாராமையால் ஆழ்வார் தீராத ஆசையுடன் ஆற்றாமையோடு அலமருதல்’** என்பதனை விளக்கும் திருவாய்மொழியில் (5.8) மூன்றாம் பாசுரம்.

(3). என்நான் செய்கேன்? யாரே களைகண்?
என்னைஎன் செய்கின்றாய்?
உன்னால் அல்லால் யாவ ராலும்
ஒன்றும் குறைவேண்டேன்;
கன்னார் மதிள்சூழ் குடந்தைக் கிடந்தாய்;
அடியேன் அருவாணாள்
செல்நாள் எந்நாள்? அந்நாள் உனதாள்
பிடித்தே செலக்காணே (3)

(என்நான் செய்கேள் - அடியேன் என் செய்கேன்; களைகண் - இரட்சகர்; உன்னால் அல்லால் - உன்னைத் தவிர்த்து; யாவராலும் - வேறு ஒருவிதமான உபாயத்தாலும், குறை ஒன்றும் வேண்டேன் - சிறிதும் விருப்பம் உடையேன் அல்லேன்; அடியேன் அரு[12] - அடியேனடைய ஆன்மா; வாழ்நாள் - வாழுங்காலத்தில்; செல்நாள் - கழிகின்ற நாட்கள்; உனதாள் - உனது திருவடிகளை; செல - நடக்கும்படி; காண் - கடைக்கண் நோக்க வேண்டும்)

“நான் என் காரியம் செய்கை என்று ஒன்று உண்டோ? நீயே செய்து தலைக்கட்டித் தரவேண்டும்” என்கின்றார்.

இப்பாசுரத்தில் **“உன்னால் அல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்”** என்ற பகுதியே நமக்கு வேண்டியதாகும். இதற்கு

12. அருபியான பொருளுக்கு ‘அரு’ என்று பெயர்; உருவமுடைத்தல்லா மையாலே ஆன்மா ‘அரு’ என்று சொல்லப் பெறுகின்றது.



ஈட்டாசிரியர் மூன்று வகையாகப் பொருள் அருளிச் செய்கின்றார்: (1) ‘நான் என் செய்கேன்’ என்பதனை மாத்திரம் கடாட்சித்து அருளிச் செய்வது. ‘உன்னால் வரும் உன்னையொழிய, வேறு உபாயங்களால் வரும் உன்னையும் வேண்டேன்’ என்கின்றார் என்றபடி; (2) ‘என் நான் செய்கேன், யாரேகளை கண்’ என்ற இரண்டையும் கடாட்சித்து அருளிச் செய்வது: ‘உன்னாலே பெறும் உன்னையொழிய வேறு உபாயங்களாலும், வேற தெய்வங்களாலும் பெறும் உன்னையும் வேண்டேன்’ என்கிறார் என்றபடி; (3) ‘பிராப்யனான உன்னையொழிய வேறோர் ஐசுவர்யார்த்திகளால் என்றபடி. அசேதநமான ஐசுவர்யார்த்திகளை ‘யாவராலும்’ என்றது ‘பிராப்யம் ஒரு பரமசேதநம்’ என்கின்ற வாசனையாலே என்க.

இதே திருவாய்மொழியில் பலசுருதிப் பாசுரம்:

(4). உழலை யென்பில் பேய்ச்சி
முலையூடு அவளை உயிருண்டான்
கழல்கள் அவையே சரணாகக்
கொண்ட குருகூர்ச் சடகோபன்
குழலின் மலியச் சொன்ன
ஓரா யிரத்துள் இப்பத்தும்
மழலை தீர வல்லார்
காமர் மானேய் நோக்கியர்க்கே (11)

(உழலை-அழல் தடி போன்ற; என்பில் - எலும்புகளையுடைய; முலை ஊடுன்-முலைவழியாக; கழல்கள் -திருவடிகள்; குழலில் மலிய-குழலோசையைக் காட்டிலும் இனிதாக; மழலைதீர-அறியாமை தொலையும்படி; வல்லார்-ஓதவல்லார். மானேய் நோக்கியர்க்கு - மான் போன்ற நோக்கையுடைய திவ்விய அப்சரசுகளுக்கு; காமர் - ஆதரிக்கத்தக்கவராவர்)

இப்பத்தைப் பழுதற கற்க வல்லவர்கள் காமினிகட்குக் காமுகர் போலே ஸ்ரீ வைணவர்கட்கு இனியர் ஆவர் என்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி **‘அவளை உயிருண்டான் கழல்களையே சரணாகக் கொண்ட’** என்பதாகும். ‘விரோதிகளை அழிக்கின்ற சுபாவத்தையுடைய கண்ணபிரானது திருவடிகளையே விருப்பமில்லாதவைகள் நீங்குவதற்கும் விருப்பமுள்ளவைகளை அடைவதற்கும் உபாயம் என்று அறுதியிட்ட ஆழ்வார்’ விரோதிகளைப் போக்குவதும் அவனையே தருவதும் திருவடிகளே என்பார் **‘அவையே’** என தேற்றேகாரம் கொடுத்து ஓதுகின்றார். பலியாவிட்டாலும் தம்மடி விடாதவரே அன்றோ இவர்? ஆதலில் **‘கொண்ட’** என்கிறார்.

**‘திருவல்லவாழ் செல்லுதலைத் தடுக்கும் தோழியர்க்குத் தலைவி கூறுதல்’** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (5.9) பல சுருதிப்பாசுரம்:

(5). நாமங்கள் ஆயிரம்உடைய
நம்பெரு மான்அடிமேல்
சேமங்கொள் தென்குருகூர்ச்
சடகோபன் தெரிந்துரைத்த
நாமங்கள் ஆயிரத்துள்
இவைபத்தும் திருவல்லவாழ்
சேமங்கொள் தென்னகர்மேல்
செப்புவார்சிறந் தார்பிறந்தே (11)

(நம் பெருமான் - எம்பெருமான்; அடிமேல்-திருவடிகளின் மேலே; சேமங்கொள் - காவலாகப்பற்றின; தெரிந்து உரைத்த - ஆராய்ந்து சொன்ன; நாமங்கள் ஆயிரத்துள் - திருநாமங்களைப் போன்ற ஆயிரம் திருப்பாசுரங்களுள்; சேமங்கொள் - அரண் அமைந்த; செப்புவார் - ஓத வல்லவர்கள் ; பிறந்தே - பிறந்தாலும்; சிறந்தார் - சிறந்தாராவர்)

இந்தப் பாசுரத்தில் "நாமங்கள் ஆயிரம் உடைய நம் பெருமான் அடிமேல் சேமங்கொள் தென்குருகூர் சடகோபன்" என்ற பகுதி நமக்கு வேண்டியதாகும்.

'குணங்களுக்கும் செயல்களுக்கும் வாசகமான திருப்பெயர்களை யுடையவனாகையாலே சர்வேசுவரனாகப் பிரசித்தனானவன். 'நம்' என்பது பிரசித்தியைக் காட்டும். பெருமான் - சர்வேசுவரன்; அடிமேல் சேமம் கொள் தென்குரு கூர்ச்சடகோபன் - புறம்புள்ள காற்கட்டுகளை விட்டு அவன் திருவடிகளையே இரட்சகமாகப் பற்றிய ஆழ்வார்.

'ஆழ்வார் தாம் சேர்ந்தநுபவிக்கும் நிலையைச் செய் என எம்பெருமான் வேண்டுதல்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (5-10) பல சுருதிப்பாசுரம்:

(6). நாகணைமிசை நம்பிரான் சரணே
சரண்நமக் கென்று நாடொறும்
ஏக சிந்தைய னாய்க்குரு கூர்ச்
சடகோபன் மாறன்
ஆக நூற்றஅந் தாதி ஆயிரத்துள்
இவையுமோர் பத்தும் வல்லார்
மாக வைகுந்தத்து மகிழ்வு
எய்துவர் வைகலுமே (11)

(நாகணைமிசை - பாம்புப் படுக்கையின் மீது; சரணே - திருவடிகளே; சரண் என்று - தஞ்சம் என்று; ஏக சிந்தையனாய் - உறுதியான எண்ணத்தனாய்; ஆக - தாம்சத்தை பெறுவதற்க; நூற்ற - அருளிச் செய்த; மாகம் - பரமாகாசம் (பரமபதம்))

இப்பத்தும் கற்றார் பரமபதத்திலே சென்று நித்தியாநுபவம் பண்ணப் பெறுவர் என்கின்றார்.



இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகதிகள் 'நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு' என்பதும் 'நாடொறும் ஏக சிந்தயைனாய்' என்பதுவும் ஆகும். 'திருவனந்தாழ்வானைப் படுக்கை யாகவுடைய சர்வேசுவரனின் திருவடிகளே நமக்கு உபாயம் என்று'. ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்டிருத்தல் அறப்பெரியவனுக்கு இலட்சணமாகையாலே, சர்வாதிகாரனே சரண் எனப்பட்டது. இங்கு திருவனந்தாழ்வானே புருஷகாரம் என்பது அறியத்தக்கது. அடியார்கள் விஷயத்தில் உபகார சீலனாதலின் 'நம்பிரான்' எனப்பட்டது. 'சரணே சரண்' என்ற ஏகாரத்தாலே வேறு உபாயத்தை விரும்பாத உபாயம் என்பதாகின்றது. இதனால் 'ஏக' பதத்தின் பொருள் சொல்லப் பெறுகின்றது. 'ஏகபதம்' என்பது சரமசுலோகத்திலுள்ள ஏக பதத்தை, 'ஏகம்' என்ற பதம் ஏகாரத்தின் பொருளது; 'என்னையே' என்பது பொருளாம்.

நாடொறும் ஏக சிந்தையனாய் - புறம்பு உண்டான சிந்தனை போய், இவ்விஷயத்தில் ஒருதன்மையான எண்ணத்தையுடையவராய்.

ஆக, இந்த ஆறு பாசுரங்களின் பகுதிகளாலும் சேதநன் செய்ய வேண்டிய பிரார்த்தனையோடு கூடிய செயல் இன்னதெனத் தெளி வுறுத்தப்பெற்றது.

6. திருமகள் அவளுடைய கேள்வன் ஆகியவர்கட்கு எப்பொழுதும் தொண்டு புரிதலையே வேண்டுகின்ற பொருளைத் தரும் நித்திய சம்பந்தம் (எப்பொழுதும் உள்ள தொடர்பு)

இந்தச் சிறப்பு திருவாய்மொழி ஆறாம் பத்தால் தெளிவாகின்றது. 'தோழி தாய்மாரை நோக்கிக் கூறுதல்' என்பதை விளக்கும் தொழி பாசுரமாக வரும் திருவாய மொழியில் (6.5) எட்டாம் பாசுரம்:

(1) திருந்து வேதமும் வேள்வி யும்திரு
மாம களிரும் தாம்மலிந்(து)
இருந்து வாழ்பொரு நல்வ டகரை
வண்தொ லைவில்லி மங்கலம்
கருந்த டங்கண்ணி கைதொ முதஅந்
நாள்தொ டங்கியிந் நாடொறும்
இருந்தி ருந்'தர விந்த லோசன!'
என்றென் றேநைந்தி ரங்குமே (8)

(திருந்து வேதம் - பரிசுத்தமான வேதங்கள்; வேள்வி - யாகம்; திருமாமகள் - செல்வம்; மலிந்து இருந்து - நிரம்பியிருந்து; வாழ் - பிராமணர்கள் வாழ்கின்ற; பொருநல் வடகரை-தாமிரபரணியின் வடகரையிலுள்ள; கருதடகண்ணி - கறுத்துப் பெருத்த கண்களையுடையள்; கை தொழுத அந்நாள்-அஞ்சலி பண்ணின அன்று; இருந்து இருந்து - இடையிடையே ஏங்கி யேங்கியிருந்து; அரவிந்த லோசன - தாமரைக்

கண்ணனே; என்று என்றே - பலகாலும் அழைத்து; நைந்து இரங்கும்-பல படியாலும் சிதிலையாகா நின்றாள்)

தொலைவில்லித் திருப்பதியைச் சேவிக்கப் பெற்ற அந்நாள் தொடங்கி இன்றுவரை இப்பெண்பிள்ளை அத்தலத்து எம்பெருமானது கண்ணழகில் ஈடுபட்டுத் தளராநின்றாள்-என்கிறது இத்திருவாய் மொழிப் பாசுரம்.

இப்பாசுரத்தில் '**திருமாமகளிரும் தாம் மலிந்திருந்து**' என்ற பகுதியே நமக்கு வேண்டுவது. திருமாமகளிரும் தாம்-என்பதன் பொருள் செல்வத்தையுடைய பிராமணர்கள் என்பது. ஆராதிக்கின்றவர்களுடைய நிறைவு இருக்கிறபடி. திருமாமகள்-செல்வம். 'திருமாமகளிரும்தாம்' வேறு ஒரு பொருளும் அருளிச் செய்யப் பெறுகின்றது. ஆராதிக்கப் பெறுகின்ற பிராட்டியும் தானுமாகவுமாம். தாம்-தான். இங்கே ஈசுவரனைக் குறிக்கின்றது. ஆக, பிரமாணம் பிரமேயம் பிரமாதாக்கள் குறைவற்று வாழ்கின்ற தேசம். பிரமாணம், வேதம்; பிரமேயம், வேள்வி; பிரமாதா, பிரமாணங்கள். இரண்டாவது பொருளில் 'பிரமேயம்' என்றது சர்வேசுவரனை. மலிந்திருந்து குறைவற்று இருந்து என்றபடி.

இதே திருவாய்மொழியில் பல சுருதிப்பாசுரம்:

(2). சிந்தை யாலும்சொல் லாலும் செய்கையி
னாலும் தேவபி ரானையே
தந்தை தாயென் றடைந்த வண்குரு
கூர வர்சட கோபன்சொல்
முந்தை யாயிரத் துள்ளி வைதொலை
வில்லி மங்கலத் தைச்சொன்ன
செந்த மிழ்பத்தும் வல்ல வர் அடி
மைசெய் வார்திரு மாலுக்கே (11)

(சிந்தை சொல் செய்கை - மூன்று கரணங்கள்; தேவபிரான் - எம்பெருமான்; தந்தை தாய் என்று - சகலவித உறவுகளாக அறுதியிட்டு; முந்தை - அநாதியான; திருமாலுக்கு - பரவாசுதேவனுக்கு; அடிமை செய்வார் - கைங்கரியம் செய்யப் பெறுவர்)

இந்தத் திருவாய்மொழியைக் கற்றவர்கள் இதற்குத் தகுதியான கைங்கரியத்தைச் செய்யப் பெறுவார்கள் என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் '**அடிமை செய்வார் திருமாலுக்கே**' என்பதே நமக்கு வேண்டிய பகுதியாகும். இதனைக் கற்க வல்லவர்கள் திருமகள்கேள்வனுக்கு அடிமை செய்யப் பெறுவர். பெருமாளும் பிராட்டியும் சேர இருக்க இளைய பெருமாள் அடிமை செய்தாற் போல, சேர்த்தியிலே அடிமை செய்யப் பெறுவர் என்பார் '**திருமாலுக்கு அடிமை செய்வார்**' என்கின்றார்.



'**தலைவனது நகர் நோக்கிச் சென்ற மகளைக் குறித்து தாய் இரங்குதல்**' என்ற கருத்தை விளக்கும் **தாய்ப் பாசுரமாக** நடைபெறும் திருவாய் மொழியில் (6.7) **எட்டாம் பாசுரம்:**

(3). ஒசிந்த நுண்ணிடை மேல்கையை
வைத்து நொந்துநொந்து
கசிந்த நெஞ்சின ளாய்க்கண்ண
நீர்துளும்பச் செல்லுங்கொல்?
ஒசிந்த ஒண்மல ராள்கொழுநன்
திருக்கோ ளூர்க்கே
கசிந்த நெஞ்சின ளாய்எம்மை
நீத்தஎம் காரிகையே (8)

(ஒசிந்த - துவண்ட; நுண்இடைமேல் - மெல்லிய இடுப்பின்மீது; கையை வைத்து - (இளைப்பினால்) கையை வைத்துக்கொண்டு; நொந்து நொந்து - மேன்மேலும் நோவு பெற்று; கசிந்த - ஈரமான; கண்ண நீர் - கண்ணீர்; துளும்ப - பெருகும்படி; செல்லுங்கொல் - சென்று சேரக்கூடுமோ; ஒண்மலராள் கொழுநன் - பெரிய பிராட்டியாரின் கேள்வன்; கசிந்த நெஞ்சு-ஈர நெஞ்சு; எம்மை நீத்த - எம்மைவிட்டுப் பிரிந்து சென்ற; எம் காரிகை - அழகியளான என் பெண்பிள்ளை)

'அன்பினாலே திருக்கோளூர்க்கு என்னை விட்டுப் பிரிந்து சென்ற என் பெண் பிள்ளை அந்த அன்பே தணையாகப் புகவல்லளேயோ?' என்கிறாள். '**ஒசிந்த ஒண்மலராள் கொழுநன் திருக்கோளூர்க்கே**' என்பது இப்பாசுரத்தில் நமக்கு வேண்டியபகுதி. ஒண்மலராள் கொழுநன் உண்டு, அவளுடைய திருக்கோளூர்க்கே. 'ஒண்மலராள் கொழுநன்' என்பதற்கு இரண்டு வகையான பாவனை அருளிச்செய்கின்றார் ஈட்டாசிரியர். முதலாவது காதல் குணத்திலே நோக்கு; அவனுடைய காதல் குணத்திலே அகப்பட்டவள் இனி மீளப் புகுகின்றாளோ? என்னுதல். இரண்டாவது அறப்பெரியவனாந் தன்மையிலே நோக்கு; ஒண்மலராள் கொழுநன் என்று அவனுக்கு ஏற்றம் இருக்கிறபடி என்னுதல். 'திருமகளார் தனிக்கேள்வன்' (திருவாய் 1.6:9) என்னும் பெருமையுடைய பிரான் அன்றோ? இப்பெண் பிள்ளை தானும் நானுமாக இருந்த சேர்த்தியைத் தவிர்த்தது. பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியைக் காண வேண்டியே போலும்!

'**திருநாடு முதலியவற்றில் தலைமகள் பறவைகளைத் தூதுவிடல்**' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (6.8) **பத்தாம் பாசுரம்:**

(4). வந்திருந் தும்முடைய
மணிச்சேவலும் நீருமெல்லாம்,
அந்தரம் ஒன்றுமின்றி,
யலர்மேலசை யும்அன்னங்காள்!
என்திரு மார்வற்கென்னை
யின்னவாறிவள் காண்மினென்று,

மந்திரத் தொன்றுணர்த்தி,
யுரையீர்மறு மாற்றங்களே (10)

(வந்திருந்து - (ஏற்கனவே என் கண்ணெதிரில்) வந்திருந்து; மணிசேவல் - அழகிய சேவல்; அந்தரம்-இடையூறு; அலர்மேல் - பூக்களின்மேல்; என்திருமார்விற்கு - இலக்குமி பதியான எம்பெருமானுக்கு; இவள் இன்ன ஆறு காண்மின் என்று - இப்பராங்குச நாயகி இன்னவண்ண மானாள் காணும் என்று; மந்திரத்து - அவளும் அவனுமான தனியிடத்தில்; மந்திரம் - இரகசியம்; ஒன்று உணர்த்தி - ஒரு பேச்சு அறிவித்து; மறுமாற்றங்கள் - அதற்கு அவன் சொல்லும் மறுமொழிகள்; உரையீர் - வந்து (என்னிடம்) சொல்லுங்கள்)

இது மகள் பாசுரம்; ஆணும் பெண்ணும் கூடியிருக்கின்ற அன்னங்கள் சிலவற்றைக் குறித்து, 'பிராட்டியும் அவனுமான ஏகாந்தத்திலே என் நிலைமையை விண்ணப்பம் செய்து மறுமாற்றம் வந்து சொல்ல வேண்டும்' என்கின்றாள்.

'என் திருமார்வற்கு என்னை' என்பது இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி. இத்தொடரின் சேர்த்தியால், திவ்விய தம்பதிகளிரு வருமான சேர்த்தியிலே தான் அடிமை செய்ய ஆசைப்பட்டிருக்கின்றமை விளங்கும். 'எனக்கு அங்கு ஓர் அடியில்லாமை கிலேசப்படுகின்றேனோ?' 'பிராட்டி சந்தியியில் இராம பிரானைப் பார்த்து இந்த வார்த்தையைச் சொன்னார்' என்கின்றபடியே சொன்ன வார்த்தை விலைபோமவள் முன்னால் சொல்லுங்கள். நான் பற்றின அடைவே பற்றுங்கள் என்கின்றாள். 'மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்' என்றும், 'நம்திருவுடையார்' என்றும் நான் பற்றின அடைவே என்னுதல். 'உம்முடைய மணிச் சேவல்' என்று உங்களைப் புருஷகாரமாகக் கொண்டு, சேவலை நான் பற்றின முறையே நீங்களும் பிராட்டி புருஷகாரமாக அவனைப் பற்றுங்கள்' என்னுதல்.

'கேட்டோர் நெஞ்சம் நீராய் உருகும் வண்ணம் ஆழ்வார் எம்பெருமானைக் கூப்பிடுதல்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (6.9) மூன்றாம் பாசுரம்.

(5). ஞாலத் தூடே நடந்தும்,
நின்றும், கிடந்திருந்தும்,
சாலப் பலநாள் உகந்தோ(று),
உயிர்கள் காப்பானே!
கோலத் திருமா மகளோ(டு)
உன்னைக் கூடாதே,
சாலப் பலநாள் அடியேன்
இன்னம் தளர்வேனோ? (3)

(உகந்தோறும் - ஒவ்வொரு யுகத்திலும்; ஞாலம் - பூமி; சாலப் பலநாள் - பல்லாயிரம் ஆண்டளவும்; உயிர்கள் - பிராணிகள்; காப்பானே! - காப்பானே!; கோலம் - அழகு; திருமாமகள் - பெரிய பிராட்டியார்; கூடாதே - கிட்டி அநுபவிக்கப் பெறாமல்;



சாலப்பலநாள் - (மேலுள்ள) மிகப்பல காலம்; இன்னும் - உன்உறவு பெற்ற பின்னரும்; தளர்வேனோ - இழந்து துடிப்பது தானோ?)

"யுகந்தோறம் இராமன் கிருட்டிணன் முதலிய அவதாரங்களைச் செய்து காப்பாற்றுவது உன்னுடைய இயல்பாக இருக்க நான் நோவு படக் கடவேனோ?" என்கின்றார்.

"கோலத் திருமாமகளோடு உன்னைக் கூடாதே" என்பது இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதியாகும். "தாயும் தமப்பனும்[13] கூட இருக்கக் கிட்டப் பெறாமல், பால் குடிக்கும் குழந்தை நாக்கு ஒட்டிக் கிடந்து துடிக்குமாறு போலவே இருக்கிற காணும்!" என்பது இதன் கருத்து. 'வேறாகாதவள்?' என்கின்றபடியே அவனும் அவளுமான சேர்த்தி யன்றோ இவருக்குப்பேறு?

இந்த ஐந்து பாசுரப் பகுதிகளாலும் திருமகள் அவளுடைய கேள்வன் ஆகியவர்கட்கு எப்பொழுதும் தொண்டு புரிதலையே வேண்டுகின்ற பொருளைத் தரும் நித்திய சம்பந்தம் தெளிவாகின்றது.

7. கைங்கரியத்தை ஏற்றுக் கொள்கின்ற எம்பெருமானுடைய அளவற்ற அநுபவிக்கும் தன்மை.

இந்தச் சிறப்பு ஏழாம் பத்தால் விளக்கம் அடைகின்றது. "இந்திரியங்களால் இன்னும் எத்தனை நாள் துன்புறுவேன்' என்று ஆழ்வார் வருந்தல்" என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (7.1) இரண்டாம் பாசுரம்.

(1). என்னை யாளும் வன்கோ ஓரைந் திவை செய்து
இராப்பகல் மோது வித்திட்டு
உன்னை நான் அணுகாவகை செய்து போதி கண்டாய்;
கன்ன லே! அமு தே! கார் முகில் வண்ணனே!
கடல் ஞாலம் காக்கின்ற
மின்னு நேமியி னாய்! வினை யேனுடை வேதியனே(2)!

(என்னை ஆளும் - என்னை அடிமை கொள்ளுகின்ற; வன்கோ - கொடிய அரசர்கள் போன்ற; ஓர் ஐந்து இவை பெய்து - இந்த பஞ்சேந்திரியங்களை ஏவி வைத்து; இராப் பகல் - இரவும் பகலும்; மோது வித்திட்டு - பிடிக்கச் செய்து; அணுகா வகை - கிட்டாதபடி; செய்து போதிகண்டாய் - பண்ணிப் போகின்றாய்; கார்முகில் - காளமேகம்; கடல் ஞாலம் - கடல் சூழ்ந்த உலகங்கள்; நேமி - திருவாழி; வினையேன் - பாவியேன்; வேதியனே! - வேத வேத்தியனாயிருப்பவேன!)

"எலி எலும்பனான அடியேனை இந்திரியங்களாலே நோவுபடுத்தி அந்த நோவை அறிவிக்க முடியாதபடி கடக்க நிற்கின்றாயே" என்கின்றார்.

13. பிராட்டியும் அவனும் அண்மையில் இருக்க என்றபடி.

'கன்னலே! அமுதே!' என்ற இப்பாசுரத்தின் பகுதி நமக்கு வேண்டியது. "உன்னுடைய எல்லையற்ற இனிமையை எனக்கு நீ காட்டிக் கொடுக்காமலிருந்தால் இந்திரியங்களின் வழியே நான் ஓடித்திரிய சுவையுடையேனாவேன்; உன்னுடைய போக்கியதையை நீ காட்டிக் கொடுத்தாயாதலால் உன் அநுபவத்திற்கு விரோதியாக இவ்விந்திரியங்கள் என்ன பாடுபடுத்துமோ? என்று அஞ்சா நின்றேன்" என்கின்றார். கன்னல்-கரும்பு; அமுது-இனிய பொருளுமாய் சாவாமல் காக்கும் மருந்துமாய் இருப்பது. கன்னலும் அமுதும் எல்லாச் சுவைகட்கும் உபலட்சணமாகக் கொண்டு அருளிச் செய்யப்பட்டது.

இதே திருவாய் மொழியில் **ஏழாம் பாசுரம்:**

(2). ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத
ஓரைவர் வன்கயவரை
என்று யான்வெல் கிற்பன்உன் திருவருள் இல்லையேல்?
அன்று தேவர் அசுரர் வாங்க அலைகடல்
அரவம் அளாவி ஓர்
குன்றம் வைத்த எந்தாய்! கொடியேன் பருகு இன்
னமுதே! (7)

(அன்று - முன்பு ஒரு காலத்தில்; வாங்க - வலிக்கும்படியாக; அரவம் - வாசுகி; அளாவி - சுற்றி; ஓர் குன்றம் - மந்தரமலை; வைத்த - நாட்டிய; கொடியேன் - பாவியேன்; இன்அமுதே - இனிய அமுதமே; திருவருள் - கிருபை; ஒன்று சொல்லி - ஒரு விஷயத்தில் சபலத்தைப்பண்ணி; ஒருத்தினில் நிற்கிலாத - அதிலே நிலைநில்லாத; ஒருத்து-ஒருமைப்பாடு; ஓர்ஐவர் - பஞ்சேந்திரியங்கள்; வன்கயவர் - பிரபலக் கொடியவர்கள்; என்று - என்றைக்கு; வெல்கிற்பன் - வெல்லவல்லவனாகவேன்)

"அடியார்க்கு அருந்தொழில் செய்தும் அபேட்சிதம் தலைக்கட்டு வதையே இயல்பாக உடைய நின் கருணை இல்லையேல் மிகுந்த கயமையை உடைய இந்திரியங்களை என்னால் வெல்ல உபாயம் உண்டோ?" என்கின்றார்.

இப்பாசுரத்தில் 'கொடியேன் பருகு இன்னமுதே' என்பதே நமக்கு வேண்டிய பகுதியாகும். 'பாவியேனாகிய அடியேன் கடைந்ததனையே ஆசைப்படப் பெற்றிலேன். கொடியேனாகிய அடியேன் பருகுவதற்குரிய இன்னமுதமாய் இருப்பவனே' என்ற பொருள் காண்க.

**'திருவரங்கப் பெருமானிடம் தலைவி மிகவும் மோகித் திருப்பதைக் கண்டு திருத்தாயார் அரங்கனைப் பார்த்து வேண்டுதல்'** என்பதை விளக்கும் தாய்ப் பாசுரமாக நடைபெறும் இத்திருவாய் மொழியில் (7.2) ஐந்தாம் பாசுரம்.

(3). சிந்திக்கும்; திசைக்கும்; தேறும்; கை கூப்பும்;
'திருவரங் கத்துள்ளாய்!' என்னும்;



வந்திக்கும், ஆங்கே மழைக்கண்நீர் மல்க
'வந்திடாய்' என்றுஎன்றே மயங்கும்;
அந்திப்போ(து) அவுணன் உடலிடந் தானே!
அலைகடல் கடைந்தஆ ரமுதே!
சந்தித்துன் சரணம் சார்வதே வலித்த
தையலை மையல்செய் தானே! (5)

(அந்திப் போது - மாலைப்பொழுதில்; அவுணன் - இரணியன்; இடந்தானே - பிளந்தவனே; அலைகடல் - அலை எறிகின்ற கடல்; கடைந்த ஆரமுதே- (தேவர்கட்காகக்) கடைந்த ஆராஅமுதமே; சந்தித்து - கலந்து; சரணமே - திருவடிகளிலேயே; சார்வது - சேர்வது; வலித்த - திடமான விருப்பம் கொண்ட; தையல் - பெண்; மையல் செய்தானே - மதிகெடச் செய்தவனே; சிந்திக்கும் - (ஏற்கனவே நடைபெற்ற கலவியைச்) சிந்தனை செய்கின்றாள்; திசைக்கும் - அறிவு அழியா நின்றாள்; தேறும் - தெளிவு பெறுகின்றாள்; கைகூப்பும் - அஞ்சலி பண்ணாநின்றாள்; வந்திக்கும் - தலைவணங்கா நின்றாள்; ஆங்கே - அவ்வளவிலே; மல்க - பெருகநின்று; வந்திடாய் - வாராய்; என்று என்றே - பல காலும் சொல்லி; மயங்கும் - (வரக் காணாது) மோகிக்கின்றாள்)

"இவளுக்கு ஒவ்வொரு கணத்திலும் மாறுபட்டு ஒன்றோடு ஒன்று சேராதே வருகின்ற நிலை வேறுபாடுகளை அறிவித்து, இவளை இப்படிப்படுத்துதல் உம்முடைய நீர்மைக்குப் போருமோ?" (ஈடு) என்கின்றாள்.

இப்பாசுரத்தில் 'அலை கடல் கடைந்த ஆரமுதே!' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். "உன்னை அமுதமாக நினையாமல் உப்புச் சாற்றை அமுதமாக நினைத்து அதற்காக உன் திருமேனியை நோவுபடுத்துபவர்களுக்கோ நீ உதவலாவது?' ஆரா அமுதாய்! அடியேன் ஆவி அகமே தித்திப்பாய்' (திருவாய் 5.8.10) என்றும் 'அமுதிலும் ஆற்ற இனியன்' (திருவாய் 1.6.6) என்றும் இருப்பார்க்கு உதவலாகாதோ?"

**'இன்கவி பாடும் பேற்றை எம்பெருமான் தமக்கு அருளினமைக்குக் கைம்மாறு இல்லை எனல்'** என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (7.9) ஒன்பதாம் பாசுரம்:

(4). திறத்துக்கேய் துப்புர வாம்திரு மாலின்சீர்
இறப்பெதிர் காலம் பருகிலும் ஆர்வனோ?
மறப்பிலா என்னைத்தன் னாக்கிஎன் னால்தன்னை
உறப்பல இன்கவி சொன்ன உதவிக்கே? (9)

(மறப்பு இலா என்னை - மறப்பிக்கப் பொருள் இல்லாதபடி நினைவே இல்லாதிருந்த என்னை; தன்னாக்கி-தன்னோடொக்கப் பொருளாக்கி; என்னால் தன்னை உற- என்னைக் கொண்டு தனக்குப் பொருத்தமாக; பல இன் கவி சொன்ன உதவிக்கு-பல இனிய பாசுரங்களைப் பாடுவித்த உபகாரத்திற்கு; திறத்துக்கு ஏய்-எந்த விஷயத்திலும் பொருத்தமான; துப்புரவு ஆம் திருமாலின்சீர் - சாமர்த்தியத்தையுடைய திருமாலின் குணங்களை; இறப்பு எதிர்காலம் - இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும்

கூட்டிக் கொண்டு; பருகிலும் - அநுபவித்தாலும்; ஆர்வனோ-நிறைவு பெற்றவன் ஆகேன்)

"என்னைக் கொண்டு கவிபாடுவித்துக் கொண்ட மகோபகாரகனை நிகழ் காலத்தில் மாத்திரமன்று; இறந்த காலத்தில் எத்தனை சேதநர்கள் கழிந்தார்களோ, இனி எதிர்காலத்தில் எத்தனை சேதநர்கள் தோன்று வார்களோ அவர்கள் எல்லாருடைய ஆற்றல்களையும் உபகரணங் களையும் கொண்டு அநுபவித்தாலும் ஆரமாட்டேன்; அவர்களோடு கூட அநுபவித்தாலும் ஆரமாட்டேன்" என்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி "திருமாலின் சீர், இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனோ?" என்பதாகும். திருமாலின் சீர்-திருமகள் கேள்வனுடைய கல்யாண குணங்களை; இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனோ-எல்லாச் சேதநர்களுடையவும் வாக்கு முதலான கருவிகளையும் அநுபவித்தல் முதலான ஆற்றல்களையும் நான் உடையேனாய் அநுபவிக்கப் புக்காலும் உயிர்வாழ்வதற்கு அடியான ஆயுள் அற்பமாகையாலே உதவியை நினைப்பதற்குக் காலம் போதாது. "எந்நாள் சிந்தித்து ஆர்வனோ?" என்ன வேண்டாதே, போன காலமும் மேல் வரக்கூடிய காலமும் எல்லாம் அநுபவியா நின்றாலும் தான் ஆர்வனோ?

'திருவாறன்விளை சென்று, எம்பெருமானைக் கண்டு ஆழ்வார் அடிமை செய்யக் கருதுதல்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (7.10) முதல் பாசுரம்:

(5). இன்பம் பயக்க, எழில்மலர் மாதரும்
தானும், இவ் வேழுலகை,
இன்பம் பயக்க, இனிதுடன் வீற்றிருந்
தாள்கின்ற எங்கள்பிரான்
அன்புற் றமர்ந்துறை கின்ற அணிபொழில்
சூழ்திரு வாறன்விளை
அன்புற் றமர்ந்து வலம்செய்து கைதொழும்
நாள்களும் ஆகுங்கொலோ (1)

(எழில் மலர்மாதரும் - அழகிய தாமரை மலரில் பிறந்த பெரிய பிராட்டியாரும்; தானும் - எம்பெருமானும்; இன்பம் பயக்க - ஒருவரோடொருவர் ஆனந்தம் மேலிடும் படியாக; இனிது உடன் வீற்றிருந்து - இனிமையோடு கூட எழுந்தருளியிருந்து; இவ்வேழ் உலகை - இந்த உலகங்களையெல்லாம்; இன்பம் பயக்க - இனிமையுற; ஆள்கிற - அடிமை கொண்டருளா நிற்கிற; எங்கள் பிரான் - எம்பெருமான்; அன்புற்று - மிகவும் திருவுள்ளம் உவந்து; அமர்ந்து உறைகின்ற - இருக்கின்ற; அணி பொழில் - அழகிய சோலைகள் சூழ்ந்த; அன்புற்று அமர்ந்து - அன்போடு பொருந்தி; வலம் செய்து - வலமாகச் சுற்றி; கைதொழும்நாள் - கை தொழும்படியான நாட்களும்; ஆகும் கொல்.அன்மைக் காலமாகுமோ?)

"பெருமாள் பிராட்டியாரோடு கூடி ஆனந்தமயனாக எழுந்திருளி யிருக்கும் இடமான திருவாறன்விளையிலே அநுபவித்து அடிமை செய்யும் காலமும் ஆகுமோ?" என்கின்றார்.



இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி, "ஏழுலகை இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்" என்பதாகும்.

'ஏழுலகை இன்பம் பயக்க' - என்ற இடத்தில் ஈடு: "மாதா பிதாக்கள் இருவரும் சேர இருந்து பரியப் புக்கால், குழந்தைகளுக்கு ஒருவித குறையும் பிறவாதேயன்றோ? ஆக இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆனந்தமுண்டாக, அந்த சேர்த்தியைக் காண்கையாலே உலகத்திற்கு ஆனந்தம் உண்டாக, அதனைக் கண்டு குழந்தை (பிரஜை) பால் குடிக்கக் கண்டு உகக்கும் தாயைப் போலே, இவர்களுக்கு உண்டான பிரீதியைக் கண்டு அதனாலே தாங்கள் இனியராயிருப் பாராயின்று".

'இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற' தன் சந்நிதியாலே உலகம் அயைத்தளிரும் முறியுமாம்படி இருக்கின்றவன் தான் பெறாப்பேறு பெற்றாற் போலே 'திருவாய்மொழி கேட்கைக்குத் தகுதியாக இருப்பது ஒரு தேசம் பெற்றோம்' என்று விரும்பி வசிக்கின்ற தேசமாயிற்று. 'எங்கள் பிரான்': கேசவன் தமர் (திருவாய் - 2.7)[14] என்ற திருவாய் மொழிக்குப்பின்பு இவர் தாம் தனியர் அல்லர் அன்றோ? என்னை இடுவித்துத் திருவாய் மொழி பாடுவித்துக் கொண்ட உபகாரகன்.

இந்த ஐந்து பாசுரங்களின் பகுதிகளின் விளக்கத்தால் கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளுகின்ற எம்பெருமானுடைய அளவற்ற அநுபவிக்கும் தன்மை தெளிவாகின்றது.

### 8. எல்லாவற்றிக்கும் தலைவனாயிருக்கும் தன்மை

இச்சிறப்பு திருவாய்மொழி எட்டாம் பத்தால் தெளிவாகின்றது. 'எம்பெருமானது அடியார் வசமாகும் நிலையையும் யாவையும் தானாகும் நிலையையும் ஆழ்வார் சங்கித்துத் தெளிதல்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (8.1) மூன்றாம் பாசுரம்:

(1). எடுத்தபே ராளன் நந்தகோ பன்தன்
இன்னுயிர்ச் சிறுவனே! அசோதைக்(கு)
அடுத்தபே ரின்பக் குலஇளங் களிறே!
அடியனேன் பெரியஅம் மானே!
கடுத்தபோர் அவுணன் உடல்இரு பிளவாக்
கையுகி ராண்டஎங் கடலே!
அடுத்ததோர் உருவாய் இன்றுநீ வாராய்
எங்ஙனம் தேறுவர் உமரே? (3)

(எடுத்த-நிதி எடுத்த; பேராளன் - மகாநுபாவன்; இன்உயிர் - இனிமையான உயிர் போன்ற; யசோதைக்கு அடுத்த - யசோதையிடம் வந்து சேர்ந்த; பேர் இன்பம் - அளவிறந்த ஆனந்தவடிவனாகி; இளங்களிறு - யானைக்குட்டி போன்றவனே; அடியனேன்-அடியேனுக்கு; பெரிய அம்மானே-பெருமைகளெல்லாம் காட்டிய

14. பன்னிரு திருநாமப்பாட்டு

தினவு விஞ்சின; அவுணன் - இரணியன்; கை உகிர் ஆண்ட கையிலுள்ள நகங்களைக் கொண்டு காரியம் செய்த; இன்று - நான் விரும்பும் இக்காலத்தில்; அடுத்தது ஓர் உரு ஆகி - தகுதியான ஓர் உருவம் கொண்டவனாகி; நீவாராய் - நீ வருகின்ற நிலையே; உமர் - (எம்போன்ற) உம்பக்தர்கள்; 'எங்ஙனம் தேறுவர் - நர்வ இரட்சகன் என்று எப்படி நம்புவர்)

''அடியவர்கட்கு எளியவன் என்று பேர் பெற்றிருக்கின்ற நீ இன்று வந்து உதவா தொழியில் நீ அண்டினவர்களின் இரட்சகன் என்பதை உன் அடியார்கள் எப்படி நம்பமுடியும்?'' என்கின்றார்.

இப்பாசுரத்தில் **'அடியனேன் பெரிய அம்மான்'** என்ற தொடர் நமக்கு வேண்டிய தொன்றாகும். **'அடியனேன் பெரிய அம்மான்'** இங்கு ஈடு: ''உன்னை மகன் என்று இருப்பார்க்கோ உதவலாவது? முறையுணர்ந்திருப்பார்க்கு உதவலாகாதோ? நான் முறையிலே நின்றவாறே நீயும் முறையிலே நில்லா நின்றாய்; அடியனேன் என்றுநான் சொல்ல, நீ ஈசுவரனாயிரா நின்றாய். இதனால் நந்தகோபனாயும் யசோதையாயு மிருந்து இவனை நியமித்து அநுபவிக்கப் பெற்றிலோமே'' என்கிற நிர்வேதமும் ஆழ்வாருக்கு உள்ளதாகத் தோன்றும்.

**'தலைவனை நோக்கிச் செல்லக் கருதிய தலைவி கூற்று'** என்பதை விளக்கும் திருவாய் மொழியின் (8.2) **இரண்டாம் பாசுரம்:**

(2). வேண்டிச்சென்(று) ஒன்று பெறுகிற் பாரில்
என்னுடையத் தோழியர் நுங்கட் கேலும்,
ஈண்டி(து) உரைக்கும் படியை, அந்தோ!
காண்கின்றி லேன்இட ராட்டி யேன்நான்;
காண்தரு தாமரைக் கண்ணன் கள்வன்,
விண்ணவர் கோன், நங்கள் கோனைக் கண்டால்,
ஈண்டிய சங்கும் நிறைவும் கொள்வான்
எத்தனை காலம் இளைக்கின் றேனே! (2)

(ஒன்று வேண்டிச் சென்று - என்னிடத்தில் ஒன்றை அபேட்சித்து வந்து; பெறுகிற்பாரில் - பெறுகின்றவர்களிடத்தில்; நுங்கட்கேனும் - உங்கட்குக்கூட; ஈண்டு - இப்போது; இது உரைக்கும்படியை - பாசுரம் இட்டு உரைக்கும் நிலையை; இடராட்டியேன் நான் - இடருற்றிருக்கிற நான்; காண்கின்றிலேன் - அறிகின்றிலேன்; காண்தரு-காண இனிய; கள்வன் - வஞ்சகன்; விண்ணவர்கோன் - நித்திய சூரிகளின் தலைவன்; கண்டால் - காணப்பெற்றால்; ஈண்டிய.அவன் பக்கலில் திரண்ட; சங்கும் - வளையும்;நிறை - அடக்கம்; கொள்வான் - கொள்ளலாமென்று; இளைக்கின்றேன் - முயல்கின்றேனே)

இது மகள் பாசுரம். 'ஆசைப்பட்ட பொருள் பெறுவார் எல்லாரிலும் நான் தலையாயிருந்தும் ஆசைப்பட்டுப் பெறாதே நான் படுகின்ற வியசனம் வார்த்தைகளால் விவரிக்கத் தக்கதன்று. ஆகையால் வியசனப்படுவதேயன்றி உங்கட்குச் சொல்ல ஒருசொல் காண்கின்றிலேன்' என்கிறாள்.



இப்பாசுரத்தில் **'விண்ணவர் கோன் நங்கள் கோனை'** என்ற பகுதியே நமக்கு வேண்டியதாகும். 'நித்திய சூரிகளைப் போலே என்னைத் தனக்கே உரியளாம் படி ஆக்கினவன். ஒரு விபூதியாகப்படுத்தின பாட்டைக் கண்டீர் என் ஒருத்தியையும் படுத்திற்று' என்றபடி.

**'எம்பெருமானது வலிமை, அவன் அன்புடையாருடன் அமர்ந்திருக்கும் சேர்த்தி முதலியவற்றைத் திருச்செங்குன்றூரில் கண்டு மகிழ்தல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (8.4) **பத்தாம் பாசுரம்:**

(3). அமர்ந்த நாதனை அவரவ ராகி,
அவர்க்கருள் அருளும்அம் மானை
அமர்ந்ததண் பழனத் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்றாற் றங்கரை யானை,
அமர்ந்தசீர் மூவா யிரவர்வே தியர்கள்
தம்பதி யவனிதே வர்வாழ்வு
அமர்ந்தமா யோனை, முக்கண்அம் மானை
நான்முக னைஅமர்ந் தேனே (10)

(அமர்ந்த நாதனை - நாதன் என்றால் தகும் தகும் என்னும் படியான நாதனாய்; அவரவராகி - தம் பக்கலில் அர்த்திகளாய் வருவார்க் கெல்லார்க்கும் அபிமானியாய்; அவர்க்கு அருளும் - அவர்க்கு விருப்பங்களை அளித்தருளும்; பழனம் - வயல்; அவனி தேவர் - நிலத் தேவர்; வாழ்வு - வாழுமிடான அப்பதியில்; அமர்ந்தேன் - கிட்டப் பெற்றேன்)

''சர்வேசுவரனாய் சகலபிராணிகளும் அடையும்படி திருச்சிற்றாற்றுப் பகுதியில் நின்றருளும் பெருமானைப் பொருந்தப் பெற்றேன்'' என்கின்றார்.

**'அமர்ந்த நாதனை'** என்பது இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதியாகும். ''எம்பெருமானைத் தவிர்த்துப பிறரை இவ்வுலகிற்கு நாதர் என்றால் 'ஐயோ! இது தகாத பேச்சாய் இருக்கிறதே' என்று பரிதபிக்க வேண்டியிருக்குமே; எம்பெருமானை நாதன் என்று சொன்னால் 'தகும் தகும்' என்னும் படியாக இருக்குமாம்''.

**'தலைவியின் உண்மைக் காதலைத் தாய்மாருக்குத் தோழி எடுத்துரைத்து, அயல் மணம் விலக்கல்'** என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (8.9) **ஐந்தாம் பாசுரம்:**

(4). புனையிழைகள் அணிவும் ஆடை
யுடையும் புதுக்க ணிப்பும்
நினையும் நீமைய தன்றிவட்கிது
நின்று நினைக்கப் புக்கால்
சுனையி னுள்தடந் தாமரை மல-
ரும்தண் திருப்புலியூர்

முனைவன் மூவுலகாளிஅப்பன்
திருவ ருள்மூழ் கினளே (5)

(புனைஇழைகள் - ஆபரணங்கள்; அணிவும்-பூணும் அழகும்; ஆடை உடையும் - சேலை உடுக்கும் அழகும்; புதுக்கணிப்பும்-வடிவில் பிறந்த புதுமையும்; நினைக்கப் புக்கால்-ஆராய்ந்தால்; இது - இந்த வைலட்சண்யம்; நினையும் நீர்மையது அன்று - நினைக்கக் கூடியதாக இல்லை; முனைவன் - தலைவன்; மூவுலகு ஆளி-திரி லோகாதிபதி; அப்பன் - பெருமான்; மூழ்கின்றனள்-அவகாகிக்கப் பெற்றாள்)

'மூவுலகாளி' என்பது இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதியாகும். "எல்லா உலகங்களையும் ஆளுகின்றவன்" என்பது இதன் பொருள். ஐசுவரியத்திற்குப் புறம்பு ஒருவரைத் தேடிப் போக வேண்டாதவன் என்றபடியாகும்.

இதே திருவாய்மொழியில் பல சுருதிப் பாசுரம்:

(5) நேர்பட்ட நிறைமூ உலகுக்கும்
நாய கன்தன் அடிமை
நேர்பட்ட தொண்டர்தொண்டர் தொண்டர்
தொண்டன் சடகோ பன்சொல்
நேர்பட்ட தமிழ்மாலை ஆயி ரத்துள்
இவையும் ஓர்பத்தும்
நேர்பட் டார்அவர் நேர்பட் டார்நெடு
மாற்கடி மைசெய்யவே (11)

(நிறைமூவுலகுக்கும் - உலகங்கள் எல்லாவற்றுக்கும்; நேர்பட்ட நாயகன் - வாய்த்த சுவாமி; அடிமை - கைங்கரியம்; நேர்பட்ட - தகுதியையுடைய; சொல் நேர்பட்ட - சொல்வாய்ப்பையுடைய; நேர்பட்டார் அவர் - பயிலப் பெற்றவர்கள்; நெடுமாற்கு - சர்வேசுவரனுக்கு; அடிமை செய்ய - கைங்கரியம் பண்ண; நேர்பட்டார் - வாய்த்தவராவர்)

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டிய பகுதி 'நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன்' என்பதாகும். "குறைவற்ற மூன்று உலகுக்கும் நேர்பட்ட நாயகன்" என்பது இதன் பொருளாகும். பாதுகாக்கப்படுகின்ற பொருள்களின் அளவு இல்லாமல் இருக்கின்ற பாதுகாக்கின்ற தன் துடிப்பு. இதனால் நாயகன்படி சொல்லப்பட்டது.

ஆக இந்த ஐந்து பாசுரங்களின் உயிரனைய பகுதிகளால் எம்பெருமானின் எல்லாவற்றிற்கும் தலைவனாயிருக்கும் தன்மை - சுவாமித்தும் - சொல்லி விளக்கப் பெற்றது.

## 9. நித்திய கைங்கரியத்துவம்

இந்தச் சிறந்த பண்பு ஒன்பதாம் பத்தால் விளக்கம் அடைகின்றது. 'எல்லா உறவின் காரியமும் தமக்குக் குறையில்லாமல் அருளுமாறு



ஆழ்வார் எம்பெருமானை வேண்டுதல்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (9.2) முதல் பாசுரம்:

(1). பண்டைநா ளாலே நின்திரு வருளும்
பங்கயத் தாள்திரு வருளும்
கொண்டுநின் கோயில் சீய்த்துப்பல் படிகால்
குடிகுடி வழிவந்தாட் செய்யும்
தொண்டரோர்க் கருளிச் சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய்
தெண்திரைப் பொருநல் தண்பணை சூழ்ந்த
திருப்புளிங் குடிக்கிடந் தானே! (1)

(தென் திரு பொருநல் - தெளிந்த அலைகளையுடைய தாமிரபரணியோடு சேர்ந்த; தண்பணை - அழகிய நீர்நிலைகள்; கிடந்தானே - சயனித்தருள்பவனே; திருஅருள் - கிருபை; பங்கயத்தாள் - பெரிய பிராட்டியார்; பண்டைநாள் - நெடுநாள்; சீய்த்து - பெருக்கி; பல்படிகால் - அநாதிகாலமாக; குடிவழி - வமிச பரம்பரை; ஆள் செய்யும் - அடிமை செய்யும்; சோதிவாய் - அழகிய திருப்பவளம்; நோக்காய் - நோக்கியருள வேண்டும்)

'வேறு புகலற்ற அடியேனைக் குறித்து ஒருவார்த்தையருளிச் செய்து விடாய் கெடக் குளிர நோக்கி அருள வேண்டம்' என்ற வேண்டுகின்றார்.

இப்பாசுரத்தில் 'பண்டை நாளாளே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு நின் கோயில் சீய்த்து'[15] என்பது நமக்கு வேண்டிய பகுதி.

இதில் திவ்வியதம்பதிகளின் திவ்விய கடாட்சமே விளை நீராகக் கொண்டு நித்திய கைங்கரியம் பண்ணும் மரபில் தோன்றப் பெற்ற தமது பெருமையை எடுத்துப் பேசுகின்றார். "எதிர்சூழல்புக்கு, எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய, விதி சூழ்ந்ததால், எனக்கேல் அம்மான் திரிவிக்கிரமனையே" (திருவாய் 2.7:6) என்று அருளிச் செய்த வராகையாலே "பண்டைநாளாலே நின் திருவருள்" கொண்டதாகக் கூறுகின்றார். பிராட்டியாரின் கிருஷி பலமாகவே எம்பெருமானின் திருவருள் வாய்த்ததால் "பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு" என்கின்றார்.

இனி "பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்" என்பதற்கு, "ஏன் அடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்ற செய்தார்" (பெரியாழ் திரு. 4.9:2) என்றும், உன் திருவருளையும்,

15. திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் முதலிய செய்தலைக் கோயில் சீய்க்கை என்பர்.

''குற்றம் செய்யாதவர் யாவர்'' (ஸ்ரீராமாயுத்: 116:44) என்னும் அவள் திருவருளையும் பெற்று என்றலுமாம். அல்லது ''கொல்லத் தக்கவனாக இருந்தும் பேரருளால் அந்தக் காகாசுரனைக் காப்பாற்றினார்'' (ஸ்ரீராமா சுந்தர. 38:34) என்றவாறு கிருபைக்குப் பாத்திரப்பட்டவனான உன்னுடைய திருவருளையும், அந்தப் பாரதந்திரியத்திற்குக் காரணமான அவள் திருவருளையும் பெற்று என்றலுமாம்.

**நின்கோயில் சீய்த்து:** திவ்விய தேசங்களிலே பண்ணும் கைங்கரியங்களில் தலையாயது இது. 'உகந்தருளின நிலங்களிலே, அவனுக்கே உரிய திரு அலரகிடுதல் முதலிய தொண்டுகளைச் செய்து' என்பது. தாந்தாமுடைய புண்ணியவிசேடத்தாலே பகவானுடைய திருவருளைப் பெற்றவர்கள் தம்தம் இல்லங்களைப் பேணுவர்கள்; பிராட்டி புருஷகாரமாகப் பகவானுடைய திருவருளைப் பெற்றவர்கள், உகந்தருளின நிலங்களைப் பேணாநிற்பார்கள். ''ஒரு தொழிலையும் செய்யாதானாய்ப் பகவான் எழுந்தருளியிருக்கின்ற கோயில்களில் வசிக்கக் கடவன்; கோயில்களில் வாசம் செய்துகொண்டு தினமும் தன் ஆற்றலுக்கு ஏற்பப் பகவானுக்குப் பணிகளைச் செய்யக் கடவன்'' (விஷ்ணு தர்மம்) என்றவாறு 'ஒரு துரும்பும் நறுக்கேன்' என்னுமவர்கட்கும் அவன் உகந்தருளின நிலத்தைப் பற்றிக் கிடக்க வேண்டும். 'சரீர சம்பந்தம் அற்றால் பெற வேண்டும் என்று ஆசைப்படுகின்ற அடிமையை, இச்சரீரத்தோடு இருக்கும்போதே கிடைக்குமாகில் விடானே அன்றோ? ''வயல் அணி அனந்தபுரம், கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினைகளைலாமே'' (திருவாய் 10.2:7) என்றாரேயன்றோ இவர் பிரிதோரிடத்தில்? பேற்றினை அடையவே, பேற்றிற்குத் தடைகளாக உள்ளவற்றைப் போக்கலாம் என்பதாயிற்று.

இங்கே திருக்கண்ண மங்கையாண்டானின் இதிகாசம் ஒன்றுள்ளது; அவரைப் பற்றி ஸ்ரீ வசன பூஷணத்தில் ''திருக்கண்ண மங்கையாண்டான் சுய வியாபாரத்தை விட்டான்''[16] என்று அருளிச் செய்யப் பெற்றுள்ளது. அப்படிப்பட்டவர் அவ்வூரில் (திருக்கண்ண மங்கையில்)[17] ஒரு மகிழமரத்தடியிலிருந்து சருகைத் திருவலகிடா நிற்கையில், உண்மை உணர்வற்ற ஒருவன் 'பகவான் உபாயம், நாம் வேறு பயன்களைக் கருதாதவர்கள், இப்போது செய்யும் பணிக்குப் பயன் என்?' என்று கேட்க, அப்போது திரு அலகிட்ட இடத்தையும் இடாத இடத்தையும் காட்டி, 'இவ்விடமும் அவ்விடமும் இருந்தபடியே கண்டாயே, இதற்கு ஒரு பயன் இல்லை என்று தோற்றி இருந்ததோ?' என்று பணித்தானாம் திருக்கண்ண மங்கையாண்டான்.

16. ஸ்ரீவசன பூஷணம்
17. சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று.



இங்கு அறிய வேண்டுவதாவது: 'இம்மைப் பயன்' என்றும் 'மறுமைப் பயன்' என்றும் பயன் இருவகைப்படும். இம்மைப் பயனுக்குப்பயனைக் கருதாத விருப்பம் இல்லாமல் செய்வதனால் ஒருகுற்றமும் இல்லை. இது பயனற்ற பயன் என்று கருத வேண்டா; திருவலகிடாத இடம் கண்கொண்டு காண வேண்டாத தாயும், திருவலகிட்ட இடம் கண்ணால் காண இனிதாயு மிருப்பதே பயன். இது ஒரு பயனையும் கருதாததற்கு விரோதியன்று என்பதாம்.

இதே திருவாய்மொழியில் **இரண்டாம் பாசுரம்:**

(2). குடிக்கிடந்து ஆக்கம் செய்துநின் தீர்த்த
அடிமைக்குற் றவேல்செய்து உன்பொன்
அடிக்கட வாதே வழிவரு கின்ற
அடியரோர்க்கு அருளிநீ ஒருநாள்
படிக்கு அளவாக நிமிர்த்தநின் பாத
பங்கய மேதலைக்கு அணியாய்
கொடிக்கொள்பொன் மதிள்சூழ் குளிர்வயல் சோலை,
திருப்புளிங் குடிக்கிடந் தாநே (2)

(கொடி கொள் - கொடிகளாலலே அலங்காரம் கொண்ட; பொன் மதிள் சூழ் - பொன் மதிளாலே சூழ்ப்பட்டு; குளிர் வயல் சோலை - குளிர்ந்த வயல்களையும் பொழில்களையுமுடைய; கிடந்தானே - சயனதிருக்கோலம் கொண்ட பெருமானே; குடிகிடந்து - பிரபந்த குலமரியாதை வழுவாமலிருந்து; ஆக்கம் செய்து-(பண்டில்லாத) நன்மைகளை உண்டாக்கி; தீர்த்த - இதர விஷயங்களில் ருசியைப் போக்கின; நின் அடிமை குற்றேவல் செய்து - உன்விஷயமான அந்தரங்கக் கைங்கரியங்களைச் செய்து; உன்பொன்னடி - உன்அழகிய திருவடிகளை; கடவாதே - நீங்காமல்; வழிவருகின்ற - பரம்பரையாய் வருகின்ற; அடியர்க்கு அருளி - அடியோமுக்கு அருள் செய்து; நீ ஒருநாள் - நீ முன்பொருகாலத்தில்; படிக்கு அளவாக - பூமிக்கத் தகுதியாக; நிமிர்ந்து - நிமிர்ந்து அமர்ந்து கொண்ட; பாதபங்கயம் - திருவடித்தாமரை; தலைக்கு அணியாய் - தலைக்குத்தக்க அலங்காரமாம்படி பண்ணியருளவேண்டும்)

''உன் திருவடிகளை அடியேன்தலைமேல் வைத்தருள வேண்டும்'' என்று திருப்புளிக் கிடந்தானைப் பிரார்த்திருக்கின்றனார்.

இந்தப் பாசுரத்தில் ''நின் தீர்த்த அடிமைக்குற்றேவல் செய்து'' என்ற பகுதி நமக்கு வேண்டியதாகும். 'அடிமைக் குற்றேவல்' என்றும் 'தீர்த்தக் குற்றேவல்' என்றும் இரண்டு உண்டு; எம்பெருமான் திறத்துக் கைங்கரியம் பண்ணுவது அடிமைக் குற்றேவல்; அப்போது சிற்றின்பம் முதலியவற்றிலும் அநுபவிக்க வேண்டும் என்ற அவா இருந்திருத்தல் கூடும்; அப்படியின்றி தன்னுடைய பரம யோக்யதையாலே இதரபுருஷார்த்தங்களில் நசையை அறவேயறுத்த அடிமைக்குற்றேவல் உண்டு; அதற்குத்தான் 'தீர்த்த அடிமைக் குற்றேவல்' என்பது திருநாமம்.

'மாற்பால் மனம் சுழிப்ப மங்கயர் தோள்கைவிட்டு' (மூன்.திருவந்:14) என்னுமாப்போலே நாமும் பகவத்விஷயத்திலே அடிமைக்குற்றேவல் செய்தோமாகிலும் சிற்றின்பம் முதலியவற்றிலும் நசை கலசியிருக்கும். அவற்றைக் காறியுமிழ்ந்து செய்யும் குற்றேவலே 'தீர்த்த அடிமைக் குற்றேவல்'. இதனைச் செய்து என்பது ஈண்டுக் குறிப்பிட பெற்றுள்ளதாகும்.

இதே திருவாய் மொழியில் **மூன்றாம் பாசுரம்:**

(3). கிடந்தநாள் கிடந்தாய்; எத்தனை காலம்
கிடத்தி, உன் திருஉடம்பு அசைய!
தொடாந்துகுற் றேவல் செய்துதொல் அடிமை
வழிவரும் தொண்டரோர்க்கு அருளித்
தடங்கொள்தா மரைக்கண் விழித்துநீ எழுந்துஉன்
தாமரை மங்கையும் நீயும்
இடம்கொள்மூ உலகும் தொழஇருந் தருளாய்;
திருப்புளிங் குடிக்கிடந் தானே (3)

(திருப்புளிங்குடிகிடந்தானே - திருப்புளிங்குடிக் கண்வளர்ந்தருளுகின்றவனே; கிடந்தநாள் - இங்கு சயனிக்கத் தொடங்கினகாலம் முதலாக; கிடந்தாய் - சயனித்துக் கொண்டுள்ளாய்; அசைய - நோவ; கிடத்தி - சயனித்திருப்பாய்; தொடா்ந்து - நிரத்தரமாக; குற்றேவல் - நித்தியகைங்கரியம்; தொல்அடிமை - அநாதியான அடிமைவழியிலே; தொண்டரோர்க்கு - அடியோமுக்கு; தடங்கொள் - விசாலமான; தாமரை மங்கை - பெரியபிராட்டியார்; இடம்கொள் - விசாலமான; தொழ - தொழும்படியாக; இருந்தருளாய் - வீற்றிருந்து சேவை சாதிக்க வேண்டும்)

''நின் திருஉடம்பு வருந்த ஒருபடியே திருக்கண் வளர்ந்தருளாமல், அடியோமுக்காகப் பிராட்டியும் நீயும் எழுந்தருள வேண்டும்'' என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் 'தொடா்ந்து குற்றவேல் செய்து' என்பது நமக்கு வேண்டிய பகுதி. 'இந்நிலையில் செய்ய அடுப்பது இது, 'இந்நிலையில்' செய்ய அடுப்பது இது' என்று உணர்த்தி, அந்தரங்கமான தொண்டுகளைச் செய்து பெருமாள் தமக்கு வேண்டிய காரியங்களில் நோக்கு இல்லாமலே இருந்தபோதும், 'இவ் அடிமையைக் கொண்டருள வேண்டும்' என்று அவ்வவ் காலந்தோறும் 'என்னை நியமித்து அருள வேண்டும்' இவ்அடிமையைக் கொண்டருள வேண்டும், என்னை நியமித்து அருள வேண்டும்' என்று வடிம்பு இட்டு அடிமை செய்தாற் போலே, அந்தரங்கமான தொண்டுகளைச் செய்து என்றபடி.

ஆசாரிய ஹிருதயத்தில் 'பண்டைநாளிற் பிறவி உண்ணாட்டுத் தேசிறே' (81) என்றோரு அற்புதமான சூக்தி அருளிச் செய்கின்றார்.



'பண்டைநாளிற் பிறவி' என்பது ஒரு கம்பீரமான அருளிச் செயல். 'பண்டைநாளாலே' என்று தொடங்குகின்ற இத்திருவாய் மொழியில் ஒரு விலட்சணமான பிறவி சொல்லப்படுகின்றது. அதாவது தாஸ்ய விரோதியான பிறவி; அபிமானம் இல்லாமல் கைங்காரியாநுருபமான குடிப்பிறவி. இப்பதிகத்தின் முதற்பாசுரத்தில் 'பல்படிகால் குடிகுடி வழிவந்தாட் செய்யும் தொண்டர்' என்றார்; இரண்டாம் பாசுரத்தில் 'உன் பொன்னடி கடவாதே' வழி வருகின்ற அடியர்' என்றார்; மூன்றாம் பாசுரத்தில் 'தொல்லடிமை வழிவருந் தொண்டர்' என்கின்றார். இப்படிப்பட்ட மிகச் சிறந்ததான தொண்டக் குலப் பிறவியை வெளியிடும் பதிகமாயிற்று இது.

தொடர்ந்து குற்றேவல் செய்து தொல்லடிமை வழிவரும் தொண்டராம் ஆழ்வார், எம்பெருமான்போகும் இடம் எங்கும் இளைய பெருமாளைப் போலே கூடவே திரிந்து 'இந்த நிலைமையில் இன்ன கைங்காரியம் செய்ய வேண்டும்' என்று அந்தரங்க அடிமைகளைச் செய்து ஆன்மாவுடக்கு இயல்பான அடிமையில் நின்று வழுவாதிருப்பவர் என்க. இப்படிப்பட்ட தொண்டரான தமக்கு அருள வேண்டும் என்று-'தொடர்ந்து குற்றவேல் செய்து தொல்லடிமை வழிவரும் தொண்டராக வேண்டும்' - என்று பிரார்த்திக்கின்றார்.

இதே திருவாய் மொழியில் **பத்தாம் பாசுரம்:**

(4). கொடுவினைப் படைகள் வல்லையாய் அமரர்க்(கு)
இடர்கெட, அசுரர்கட்க இடர்செய்
கடுவினை நஞ்சே! என்னுடை அமுதே!
கலிவயல் திருப்புளிங் குடியாய்!
வடிவிணை யில்லா மலர்மகள், மற்றை
நிலமகள் பிடிக்கும்மெல் அடியை
கொடுவினை யேனும் பிடிக்க,நீ ஒருநாள்
கூவுதல், வருதல்செய் யாயே(10)

(கொடுவினை படைகள் வல்லையாய் - விரோதிகள் திறத்துக் கொடுந்தொழில் புரியவல்ல ஆயுதங்களைக் கொண்டு காரியம் செய்யவல்லவனே; அமரர் - தேவர்கள்; இடர் - துன்பம்; இடர் செய் - துக்கத்தை விளைக்குமிடத்து; கடுவினை - விரைவில் முடிக்கவல்ல; நஞ்சே- நஞ்சானவனே; கலிவயல் - செழித்தவயல்; வடிவு - வடிவழகு; இணை இல்லாத - ஒப்பற்ற; மலர்மகள் - பெரிய பிராட்டியார்; நிலமகள் - பூமிப் பிராட்டியார்; பிடிக்கும் - வருடுகின்ற; கொடுவினையேனும் - துர்ப்பாக்கிய சாலியான அடியேனும்; பிடிக்க - வருடுமாறு; கூவுதல் - அழைத்துக் கொள்வது; வருதல் - வந்தருள்வது; செய்யாய் - செய்தருள வேண்டும்)

''எல்லை இல்லாத இனிமையையுடையதான உன் திருவடிகளிலே நாளும் வந்து அடிமை செய்யும்படி என்னை அங்கே அழைத்தல் அல்லது நீ இங்கே வருதல் செய்ய வேண்டும்'' என்கின்றார்.

இத்திருப் பாசுரத்தில் 'கொடுவினையேனும் பிடிக்க' என்பது நமக்கு வேண்டிய பகுதி. ''அடையத்தக்கவனாயும் அதில் போக்கிய தையை அறிந்தவனாயும் இருக்கின்ற நெடுங்காலம் இழந்திருக்கும்படி கொடிய பாவத்தையுடையேனான அடியேனும்'' என்பது இதன் பொருள். ''கண்கள் சிவந்து'' (8.8) என்ற திருவாய் மொழிக்குப் பின்பு இவர்க்குத் தாம் தாழ்ந்தவர் என்னும் நினைவு இல்லையன்றோ?

**'எம்பெருமானைக் காணவிரும்பி அழைத்து, தாம் விரும்பிய வண்ணமே கண்டு மகிழ்தல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் **(9.4) நான்காம் பாசுரம்:**

(5). உறுவதிது என்றுனக்கு ஆட்பட்டு, நின்கண்
பெறுவ தெதுகொல்என்று பேதையேன் நெஞ்சம்
மறுகல்செய்யும் வானவர் தானவர்க் கென்றும்
அறிவ தரிய அரியாய அம்மானே (4)

(வானவர் - அநுகூலர்; தானவர் - பிரதி கூலர்; என்றும் - எப்போதும்; அறிவது அரிய - அறிய ஒண்ணாத; அரிஆய அம்மான் - நரசிம்ம மூர்த்தி; இது உறுவது என்று - உனக்கு அடிமை செய்வதுதான் சொரூபத்திற்குத் தக்கது என்று; உனக்கு ஆட்பட்டு - உனக்கு அடிமைப்பட்டு; நின்கண் - உன்னிடம்; பெறுவது - பெறக்கூடிய பேறு; எது கொல் என்று - எதுவோ என்று (நித்திய கைங்கரியமோ அல்லது சம்சாரமோ என்று); பேதையேன் - அறிவிலியான என்னுடைய; நெஞ்சம் - நெஞ்சு; மறுகல் செய்யும் - கலங்காநின்றது)

'' 'நீர் இங்ஙன் அஞ்சுகிறது ஏன்?' என்ன, 'தேவர்கள் முதலாயினோர்க்கு அரியை ஆகையாவே எனக்கும் அரியை ஆகிறாயோ?' என்று என் நெஞ்சு கலங்கா நின்றது'' என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் 'உறுவது இது என்று உனக்கு ஆட்பட்டு' என்ற பகுதியே நமக்கு வேண்டியது. 'உறுவது இது என்று' மேலே 'ஆட்பட்டு' என்று இருக்கையாலே 'இது' என்பதற்குப் பொருள் ஆட்படுகையேயாம், 'உண்டியே உடையே உகந்தோடுவது' (பெரு. திரு. 3:4) நமக்கு உற்றதன்று; எம்பிரானுக்கு ஆட்படுவதுதான் உற்றதாகும், என்று கொண்டு'' என்றபடி. உனக்கு ஆட்பட்டு-அவ்வுறுதி கொண்டளவோடு நில்லாமல் அநுட்டான பர்யந்தமாக்கி என்றபடி. 'ஒழிவு இல் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழு இலா அடிமை செய்ய வேண்டும்' (திருவாய் 3.3:1) என்றும், 'வழிக்குக் கண்ணிலேன் நின்கண்மற்றல்லால் வேறொரு வரோடென் மனம் பற்றாது' என்றும், 'உனக்குப் பணி செய்து இருக்கும் தவமுடையேன் இனிப்போய் ஒருவன், தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கைநின் சாயை அழிவு கண்டாய்' (பெரியாழ் திரு. 5.3:3) என்றும், 'எற்றைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் உன் தன்னோடு, உற்றோமேயாவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்' (திருப் 29) என்றும் கொண்டிருந்தது என்றபடியாம்.



**'ஆழ்வார் எம்பெருமானது சீரைத் துயரத்துடன் கூறுதல்'** என்பதை விளக்கம் திருக்காட்கரைபற்றிய திருவாய்மொழியில் **(9.6) ஏழாம் பாசுரம்:**

(6). காட்கரை ஏத்தும்; அதனுள்கண் ணா!என்னும்;
வேட்கைநோய் கூர நினைந்து கரைந்துகும்;
ஆட்கொள் வான்ஒத்தென் உயிருண்ட மாயனால்
கோட்குறை பட்டது என்ஆருயிர் கோள்உண்டே (7)

(ஆட்கொள்வான் ஒத்து - அடிமை கொள்வாரைப் போலே புகுந்து; உயிர் உண்ட - ஆன்மாவைக் கொள்ளை கொண்ட; மாயனால் - மாயப் பெருமானாலே; கோள் உண்டே - புசித்துக் கொள்ளப்படச் செய்து; கோள் குறைபட்டது - போகம் மிச்சப்பட்டிருக்கின்ற; என் ஆருயிர் - என் ஆன்மா; ஏத்தும் - புகழும்; அதனுள் - அத்திருப்பதியினுள் நிற்கும்; கண்ணாஎன்னும் - கண்ணா என்று அழைக்கும்; வேட்கை நோய் - காதல் நோய்; கூர - மிகப்பெற்று; நினைந்து கரைந்து உகும் - (அவனுடைய பரிமாற்றங்களை) நினைத்து உருகிச் சிதிலமாகும்)

இந்தப் பாசுரத்தில் 'ஆட்கொள்வான் ஒத்து என் உயிர் உண்டமாயன்' என்பது நமக்கு வேண்டிய பகுதி. 'அடிமை கொள்வரைப் போலே புகுந்து என ஆன்மாவைக் கொள்ளை கொண்ட ஆச்சரியத்தை உடையவன்' என்பது இதன் பொருள். ''மேல் ஐந்தாம் பாசுரத்தில், 'திருவருள் செய்பவன் போல' என்று மறைத்துக் கூறியதை 'ஆட் கொள்வான் ஒத்து' என்று வெளியிடுகின்றார்'' என்பர் நம்பிள்ளை. கிட்டினபோது தாழநின்று மின்மினி பறக்கச் செயல்புரிந்த ஆச்சரியத்தை நினைந்து 'மாயனால்' என்கின்றார்.

**'தூதர் மீளுமளவும் தனிமை பொறாத தலைவி தலைவன் நகரான திருநாவாய் செல்ல நினைத்தல்'** என்பதை விளக்கும் திருவாய் மொழியில் **(9.8) நான்காம் பாசுரம்:**

(7). நாளேல் அறியேன் எனக்குள் ளனநானும்
மீளா அடிமைப் பணிசெய்யப் புகுந்தேன்;
நீளார் மலர்ச்சோலைகள் சூழ்திரு நாவாய்
வாளேய் தடங்கண் மடப்பின்னை மணாளா! (4)

(நீள் ஆர் - ஓங்கி நிறைந்த; வாள்ஏய் - வாள் போன்று; தடகண்கள் - பெரிய கண்கள்; மணாளா - கணவனே; நானும் - அடியேனும்; மீளா - இடையறாத; அடிமை - நித்திய கைங்கரியம்; எனக்குள்ளன நாள் அறியேன் - அதற்கு எனக்கு நீ சங்கல்பித்து வைத்த நாள் அறிகின்றிலேன்)

''ஆன்மா உள்ளவரையிலும் செய்ய வேண்டும் அடிமையைச் செய்யும் உன்னால் ஏற்றுக் கொள்ளப் பெற்ற நான் நப்பின்னைப் பிராட்டியோடே கூட இருக்கிற இருப்பிலே அடிமை செய்யப் பெறும்நாள் என்றோ? என்று அறிகிலேன்'' என்கின்றார்.

இத்திருப்பாசுரத்தில் ''நானும் மீளா அடிமை செய்யப் புகுந்தேன்'' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். ''நித்திய சூரிகள் செய்யும் உயிர்

உள்ளவரையிலும் செய்யப்படும் அடிமையிலே அன்றோ நான் அதிகரித்திருப்பது? ஒரு பயனைக் கொள்ளக் கிட்டினவனாய் ஆறியிருக்கின்றேனோ? அடிமைப் பணியினுடைய வாசனையின் இனிமை அறியாதவனாய் ஆறியிருக்கின்றேனோ?'' என்கின்றார்.

இந்த ஏழு பாசுரங்களில் குறிப்பிடப்பெறும் பகுதிகளாலும் நித்திய கைங்கரியத்துவம் விளக்கப் பெற்றதாக அமைகின்றது.

10. கைங்கரியத்திற்குத் தடையாக இருக்கக் கூடிய அனைத்தையும் அழிக்கக் கூடிய பொருட் சிறப்புகள்.

இந்தச் சிறப்புகள் திருவாய்மொழியின் பத்தாம் பத்தால் தெளிவாக்கப் பெறுகின்றன. 'திருமோகூர்ப் பெருமானைச் சரண் அடைந்து தாம் பரமபதம் அடையக் கருதியதை ஆழ்வார் அருளிச் செய்தல்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில்(*10.1*) ஏழாம் பாசுரம்:

(1). மற்றி லம்அரண் வான்பெரும பாழ்தனி முதலா
சுற்றும் நீர்படைத் ததன்வழித் தொல்முனி முதலா
முற்றும் தேவரோ டுலகுசெய் வான்திரு மோகூர்
சுற்றி நாம்வலஞ் செய்யநம் துயர்கெடும் கடிதே (7)

(வான்பெரும் பாழ்தனி முதலா - வலிய பெரிய ஒப்பற்றதான மூலப்பிரகிருதி முதலாக; சுற்றுநீர் படைத்து - ஆவரண நீரைபபடைத்து; தொல்முனி - பழையபிரமன்; உலகு செய்வான் - எல்லா உலகங்களையும் உண்டாக்குபவன் எழுந்தருளியிருக்கும் இடமான; துயர் - துக்கங்கள்; கடிது கெடும் - விரைவில் தொலைந்து போகும்; மற்று அரண் இலம் - இத்திருப்பதி தவிர வேறு ஓர் இரட்சகம் உடையோம் அல்லோம்)

''திருமோகூரை அடையவே, நம்முடைய துக்கங்கள் அப்போதே போம்'' என்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டியது 'துயர் கெடும் கடிதே' என்பதாகும். 'வழித்துணை இல்லை' என்கின்ற துன்பம் சடக்கெனப் போம் என்பதாம்.

'திருவனந்தபுரத்தைச் சேர்ந்தால், பரமபதத்திற் போலத் தொண்டு செய்யலாம் என்று கூறுதல்' - இதனை விளக்கும் திருவாய் மொழியின் (*10.2*) முதல் பாசுரம்.

(2). கெடும்இட ராய எல்லாம்
கேசவா! என்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின்
தமர்களும் குறுக கில்லார்
விடமுடை அரவில் பள்ளி
விரும்பினான் சுரும்ப லற்றும்
தடமுடை வயல்அ னந்த
புரநகர் புகுதும் இன்றே (1)



(கேசவாஎன்ன - கேசவ நாமத்தைச் சொன்னவுடன்; இடர்ஆய எல்லாம் - துன்பமானவை எல்லாம்; கெடும் - தொலைந்து போகும்; நாளும் கொடுவினை செய்யும் - நிரந்தரமாகக் கொடுமைகளைச் செய்யும்; கூற்றின் தமர் - யம தூதர்கள்; குறுககில்லார் - அணுகமாட்டாது ஓடிப்போவர்; அரவு - பாம்பு; சுரும்பு - வண்டுகள்; அலற்றும் - ஆரவாரிக்கின்ற)

பிரீதியாலே திரு நாமத்தைச் சொல்ல, திருவனந்தபுரத்திற்குச் செல்லுவதற்குத் தடையாக உள்ளவை அனைத்தும் அழியும்; அங்கே புகவரும்படி அநுகூலரை அழைக்கின்றார்.

இப்பாசுரத்தில் 'கெடும் இடராய எல்லாம்' என்ற தொடரே நமக்கு வேண்டியது. 'இடர் ஆய எல்லாம் கெடும்' என்றது பார்ப்பார்த்தப்பிய கொடுமைக்குக் கழுவாயாக பன்னிரண்டு ஆண்டுகள் செய்யும் வேள்வியைச் சரித்தால் மற்றொரு பாவத்திற்குக் கழுவாய் செய்ய வேண்டி இருக்குமன்றோ? இங்கு அதுவேண்டா; ''பாவங்களாகின்ற விறகிற்கு நெருப்புப் போன்றவர்'' (விஷ்ணுதர்மம்) என்கின்றபடி 'எல்லாத் துன்பங்களும் ஒருமுறையிலேயே அழியும்' என்கின்றார் என்றவாறு. 'கழுவாயும் பலப்பலவாக இருக்குமோ?' என்ன, கேசவா என்ன- அவன் ஒரு விரோதியைப் போக்கின படியைச் சொல்ல, விரோதி என்று பேர் பெற்றவை எல்லாம் நசிக்கும்; இராவணன் என்ற ஒருவன் தீவினை செய்ய இராக்கத சாதியார் அழிந்தாற்போலே. ''இரக்கம் இன்றி எம்கோன்செய்த தீமை இம்மையே எமக்கு எய்திற்றுக் காணீர்'' (பெரிய.திரு. *10.2:1*) என்ற திருமங்கையார் வாக்கு ஈண்டு நினைத்தல் தகும். ''போயபிழைகள் புகுதருவான் நின்றனவும்'' (திருப்.5) என்கின்றபடியே அநுபவிக்கக் கடவனவும் (பிராரப்தம் - நுகர்வினை) முன்பே தொடங்கி அநுபவிக்கின்றவையும் (ஆகாமியம்-எதிர்வினை) எல்லாம் நசிக்குமாதலின் 'எல்லாம்' என்றார். காரியத்தில் வந்தால் அதன் பயனைக் கொடுத்தே தீருமாதலின் வார்த்தை மாத்திரமே அமையும் என்பார் 'என்னக் கெடும்' என்றார்.

இதே திருவாய்மொழியில் அடுத்த பாசுரம் (*10.2:2*):

(3). இன்றுபோய்ப் புகுதி ராகில்
எழுமையும் ஏதம் சாரா;
குன்றுநேர் மாடம் மாடே
குருந்துசேர் செருந்தி புன்னை
மன்றலர் பொழில்அ னந்த
புரநகர் மாயன் நாமம்
ஒன்றும் ஓர்ஆ யிரமாம்;
உள்ளுவார்க் கும்ப ரூரே (2)

(குன்றுநேர் -மலையை ஒத்த; மாடம் மாடே - மாடங்களின் அருகே; குருந்து சேர் - குருந்த மரங்களோடு சேர்ந்த; செருந்தி - சுரபுரன்னை மரங்களும்; புன்னை - புன்னை மரங்களும்; மன்று அலர் - மன்றிலே அலரும் படியான; பொழில் - சோலை;

ஏதம் - சம்சாரதோஷம்; சாரா - தட்டாது; ஒன்றும் - ஏதேனும் ஒன்றாகிலும்; உள்ளுவார்க்கு - அநுசந்திப்பார்க்கு; உம்பர்ஊர் - பரமபதம்)

''திவினைகள் போவதற்குச் சொன்ன திருவனந்தபுரத்து எம் பெருமானுடைய திருநாமம் ஒன்றே ஆயிர நாமம் முகமான பாது காப்பைப் பண்ணும்'' என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் ''**எழுமையும் ஏதம் சாரா**'' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். 'ஒருகாலமும் பொல்லாங்கு வந்துகிட்டாது. சாரா என்றதனால் அதற்கு அவன்தானும் நினைப்பிடவும் வேண்டா என்றபடி. ''சும்மெனாதே கைவிட்டு ஓடித்தூறுகள் பாய்ந்தனவே'' (பெரியழ்.திரு. 5.4:3) ''மூச்சுவிடவும்மாட்டாமல் 'கப்சிப்' என்று வாயைத் திறவாமல் வீட்டிட்டு ஓடிப்போய் புதர்களில் (தூறுகளில்) ஒளிந்து கொண்டன'' என்கின்றபடியே, 'நாம் இவ்விடத்தில் இருப்பதற்கு உரியோம் அல்லோம்' என்று தன்னடைவே வந்துகிட்டாது. இவ்விடத்தில்,

வானோ? மறிகடலோ? மாருதமோ? தீயகமோ?
கானோ ஒருங்கிற்று? கண்டிலமால்-ஆன்ஈன்ற
கன்றுயரத் தாம்எறிந்த காய்உதிர்த்தார் தாள்பணிந்தோம்
வன்துயரை ஆஆ மருங்கு (54)

என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரம் அநுசந்தித்தல் தகும். ''வத்ஸாசுரனை மாய்த்த கண்ணனுடைய திருவடிகளை ஆச்ரயித்தோம்; அதன்பிறகு வலிய பாவங்களை அருகில் காணோம். அவை மறைந்து போன இடம் ஆகாயமோ? அலையெறியும் ஆழியோ? காற்றோ? நெருப்போ? காடோ?- என்று சென்றுவிட்டனவோ? போன இடம் தெரியவில்லையே'' என்பது கருத்து.

இதே திருவாய் மொழியில் **மூன்றாம் பாசுரம்:**

(4). ஊரும்புள்; கொடியும் அஃதே;
உலகெல்லாம் உண்டு உமிழ்ந்தான்
சேரும் தண்அ னந்தபுரம்
சிக்கெனப் புகுதி ராகில்
தீரும்நோய் வினைகள் எல்லாம்
திண்ணம்நாம் அறியச் சொன்னோம்;
பேரும்ஓர் ஆயி ரத்துள்
ஒன்றுநீர் பேசு மினே(3)

(ஊரும் - ஊருவது; புள் - கருடன்; கொடியும் - கொடியும்; அஃதே - கருடனே; உண்டு - அழித்து; உமிழ்ந்து - படைத்து; சேரும் - நித்திய வாசம் செய்யும்; சிக்கென - மிக்க ஆர்வத்துடன்; திண்ணம் - உறுதியாக; ஒன்று - ஏதேனும்ஒன்று)



''தீயவினைகள் ஒழிந்து போவதற்கு அந்நரகத்தை அடைதலே போதுமானது; ஆயிரம் திருநாமங்களில் ஏதேனும் ஒன்றினைச் சொல்லி அநுபவியுங்கள்'' என்கின்றார்.

இந்தப் பாசுரத்தில் '**தீரும் நோய் வினைகள் எல்லாம்**' என்பது நமக்கு வேண்டிய பகுதியாகும். ''துக்கங்களும் துக்கங்களுக்குக் காரண மானவைகளும் அழியும்'' என்படி. இது திண்ணமாக அநுபவ சித்தமாகையாலே கை கண்டதாகையாலே இதில் வாசி அறியாத நீங்களும் இழக்க ஒண்ணாது என்று உங்கள் நெஞ்சில் படும்படிச் சொன்னோம். பலநாள் துன்பப்பட்டுக் கரை கண்டவராகையாலே 'நாம்' என்கின்றார். 'நம்மேல் குறையற நாம் சொன்னோம்' என்பார் 'சொன்னோம்' என்கின்றார்.

இதே திருவாய்மொழியில் **ஐந்தாம் பாசுரம்:**

(5). புண்ணியம் செய்து, நல்ல
புனலொடு மலர்கள் தூவி
எண்ணுமின் எந்தை நாமம்;
இப்பிறப்பு அறுக்கும்; அப்பால்
திண்ணநாம் அறியச் சொன்னோம்
செறிபொழில் அனந்த புரத்து
அண்ணலார் கமல பாதம்
அணுகுவார் அமரர் ஆவார் (5)

(புண்ணியம் செய்து - பக்தி கொண்டு; புனல் - தீர்த்தம்; தூவி - பரிமாறி; எந்தை நாமம் - எம்பெருமானது திருநாமங்கள்; எண்ணுமின் - சிந்தனை செய்யுங்கள்; அப்பால் - மேலும்; பொழில் - சோலை; அண்ணலார் - சுவாமி; கமலபாதம் - திருவடித்தாமரைகள்; அமரர் - நித்திய சூரிகள்; அணுகுவார் - கிட்டுபவர்கள்; சொன்னோம் - தெரிவித்தோம்)

''திருவனந்தபுரத்தை சென்று சேர்பவர்கள் நித்திய சூரிகள் ஆவார்கள்; ஆகையாலே நீங்களும் அடைமின்'' என்கின்றார்.

இப்பாசுரத்தில் '**பிறப்பறுக்கும்**' என்பது நமக்கு வேண்டிய தொடர். ''தீண்டா அழும்பும் செந்நீரும்சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டா நாற்றமிகு உடல்'' (திருவரங்.கலம் 17) என்று மிகத்தாழ்வாக சொல்லப்பட்ட உடல் சம்பந்தத்தை அறுக்கும். ஈடு: கண்டதேயன்றே அதனுடைய (உடலினுடைய) இழையீடு (நூலாலேதைத்தல்) அஃதாவது, இழை இட்டாற்போலே இருக்கின்ற உறுப்புகளின் சேர்த்தி என்றபடி. கவித்துப் பார்க்க அமையுமே இதனுடைய அகவாயை; தன்னடைவே வைராக்கியம் பிறக்குமே. இப்படிக் கண்கூடாகக் கண்டிருந்தும் வைராக்கியம் பிறவா திருக்கின்றதேயன்றோ? இதற்குக் காரணம் வாசனையின் கனம்.

மாக்கேழ் மடநல்லாய் என்றுஅரற்றும் சான்றவர்
நோக்கார்கொல் நொய்யதோர் துச்சிலை - யாக்கைக்கோர்
ஈச்சிறகு அன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கைக் கடிதவதோர் கோல் (41)

என்ற நாலடியாரின் கருத்தும் ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

ஈண்டு ஈட்டில் கண்ட ஒரு சம்வாதம் (=உரையாடல்) எடுத்து காட்டப் பெறுகின்றது. ஒரு செட்டியை 'இவன் தமிழில் சிறந்த புலமையுடையவன்' என்றுபட்டருக்கு அறிமுகப்படுத்தினார்கள் அவருடைய சீடர்கள். பட்டர் அவனைப்பார்த்து 'உனக்கு யாதேனும் கேட்க விருப்பம் இருப்பின் கேட்கலாம்' என்று கூற அதற்கு அவன், ''சிலர் காண்கின்ற தேகத்துக்கு அவ்வருகு ஆன்மாவும் இல்லை; புண்ணிய பாவங்களும் இல்லை; ஈசுவரனும் இல்லை'' என்கின்றனர். சிலர் ''இச்சரீரம்தான் நிலையற்றது'' என்று இதனுடைய தாழ்வினைக் கண்டு 'அவ்வருகே நிலைத்திருக்குமது ஒன்றனைப் பற்ற வேண்டும்' என்கின்றனர்; விஷயம் ஒன்றாக இருக்க, வேறுபட்ட இவ்விரண்டு கொள்கைகளும் நடக்கிறபடி எங்ஙனே?' என்று கேட்க, 'என்னுடைய மாயையானது ஒருவராலும் தாண்ட முடியாதது' (கீதை 7.15) என்றும், ''என்னையே பற்றினவர்கள் அம்மாயையினைத் தாண்டுகின்றனர்'' என்றும் கீதை உரைக்கின்றபடியே, நல்லவர்கள் இதன் தாழ்வினைக் கண்டு அதனைக் கழித்துக் கோடற்கும், மற்றையோர்கள் இதிலே இனிமை உண்டு என்று நினைத்துக் கேடுறுதற்கும் உடலாம்படிகர்மங்கட்குத் தகுதியாக இதனை அறுதியிட்டுக் காணும் ஈசுவரன் பண்ணிற்று'' என்று அருளிச்செய்தார்.

**'ஆநிரை மேய்க்கச் சென்றால் பிரிவாற்றியிரோம் என்று போக்கைத் தவிர்க்குமாறு ஆய்ச்சியர் கண்ணனை வேண்டுதல்' என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (10.3) ஒன்பதாம் பாசுரம்:**

(6). உகக்கும்நல் லவரோடும் உழிதந்து உன்தன்
திருவுள்ளம் இடர்கெடுந் தொறும் நாங்கள்
வியக்கஇன் புறுதும்எம் பெண்மை யாற்றோம்;
எம்பெரு மான்!பசு மேய்க்கப் போகேல்;
மிகப்பல அசுரர்கள் வேண்டுஉருவம் கொண்டு
நின்றுஉழிதருவர், கஞ்சன் ஏவ;
அகப்படில், அவரோடும் நின்னொடு ஆங்கே
அவத்தங்கள் விளையும்;என் சொல்கொள்; அந்தோ!
(9)

(எம்பெருமான் - எமது தலைவனே; உகக்கும் - நீஉகக்கும் படியாக; உழிதந்து - திரிந்து; இடர்கெடும் தோறும் - ஆனந்திக்கும் தோறும்; வியக்க இன்புறுவதும் - மிகவும்



ஆனந்தப்படுவோம்; எம் பெண்மை அற்றோம் - பிறரைக் காதலிக்குமளவில் பொறாமைப்படும்படியான பெண்மையை உடையோம் அல்லோம்; ஏவ - ஏவுதலால்; வேண்டு உருவம்கொண்டு - வேண்டின வடிவுகளைக் கொண்டு; மிகநின்று - மிகவும்; உழிதரும் - திரிவார்கள்; அகப்படில் - நீ அவர்கள் கையில் அகப்பட்டால்; அவத்தங்கள் - பொல்லாங்குகள்; கொள் - பேணியருள்)

''உகக்கும் நல்லவரோடும் உழிதராய்'' என்று சொன்னவற்றைக் கேட்ட கண்ணபிரான், 'இப்படி நீங்கள் சொல்வது உண்மையான வார்த்தை யாகுமா? ஏதோ நான் போகாமைக்காகச் சொல்லுகிற வார்த்தையே யொழிய, உங்களருகே நான் வேறு சில மாதரோடே கலந்து பரிமாறினால் அதை நீங்கள் பொறுத்திருப்பீர்களோ? கண்ணாலேயே சுட்டெரித்து விட மாட்டீர்களோ?' என்று சொல்ல, அதற்கு மறுமாற்றம் உறைப்பது இப்பாசுரம்; உன்னோடு நாங்கள் கலவி செய்து அதனால் அடையும் உகப்பைக் காட்டிலும் நீ உன் உகப்புக்கு இலக்கானாரோடு கூடி நெஞ்சிடர் தீர, அதனால் நாங்கள் அடையும் உகப்பே எங்கட்கு உயர்ந்தது என்கின்றது இப்பாசுரம்.

இப்பாசுரத்தில் 'உன் தன் திருவுள்ளம் இடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும் எம் பெண்மை ஆற்றோம்' என்ற பகுதியே நமக்கு வேண்டியது.

'உகக்கும் நல்லவரோடு உழிதந்து:' எங்களைக் காட்டிலும் நீ மிகவும் விரும்பும்படியான சிறப்பினையுடையவர்களோடே உங்கள் கண் வட்டத்தில் சஞ்சரித்து. அதனால்,

'உன்தன் திருவுள்ளம் இடர்கெடுந்தோறும்:' நாம் இன்னாளோடு கலக்கப் பெற்றிலோம்' என்று உன் திருவுள்ளத்தில் இடர் உண்டாகாதபடி மகிழ்ச்சி விளையுமாகில்,

'நாங்கள் வியக்க இன்புதும்:' புறம்புள்ளாரைப்போல் அன்றி உன் உகப்பே எங்களுக்குப் பேறாகக் கொண்டுள்ள நாங்கள் மிகவும் இன்பம் எய்துவோம். எதனைக் காட்டிலும்? என்னில்: எங்களோடு கலப்பதைக் காட்டிலும் என்னுதல்; அன்றி, நீ அவர்களோடே கலந்தால் உனக்குப் பிறக்கும் ஆனந்தத்தைக் காட்டிலும் என்னுதல். ஈண்டு வியப்பு, ஆச்சரியம் மிகுதி என்ற பொருளில் அமைந்துள்ளது. 'நான் இப்படிச் செய்தால் நீங்கள் இன்புறுவதாகச் சொல்வது கூடுமோ' என்று கேட்க,

'எம் பெண்மை ஆற்றோம்' உன் உகப்புக்குப் புறம்பாய் வரும் பெண் தன்மை நாங்கள் வேண்டோம்; அன்றி, 'நீ உகந்தாரை ஒழிய உன்னை உகக்குமவர்கள் அல்லோம் காண் நாங்கள்' என்னுதல்; உன்னைத் தனித்து உகப்பாள் மூக்கறைச்சி (=சூர்ப்பணகை) அன்றோ?

**'ஆழ்வார் தாம் பெறக்கருதிய பக்தி பலித்தமையை அருளிச்செய்தல்' என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (10.4) ஏழாம் பாசுரம்:**

(7). பணிநெஞ்சே! நாளும் பரம்பரம் பரனை
பிணியொன்றும் சாரா; பிறவி கெடுத்தாளும்
மணிநின்ற சோதி மதுசூதன் என்அம்மான்
அணிநின்ற செம்பொன் அடலாழி யானே (7)

(மணி நின்ற - நீலமணியையொத்த; சோதி - தேசு; மதுசூதன் - விரோதி நிரசனன்; அணிநின்ற - தானே ஆபரணமாகப் போகும்படியாக; அடல் அழியான் - மிடுக்கையுடைய திருவாழியாழ்வானைக் கையில் ஏந்தியவனான பெருமான்; பிறவி - பிறவித் துன்பம்; கெடுத்து - போக்கி; ஆளும் - அடிமைக்கொண்டு அருள்பவன்; பிணி - சம்சாரக்கிலேசம்; சாரா - தட்டாது; பரம்பரன் - பரமபுருஷன்; நாளும்பணி - நாடோறும் வணங்கி அநுபவி)

விரோதிகளைப் போக்கி அடிமை கொள்பவனான எம்பெருமானை நாடோறும் வணங்கி அநுபவிக்குமாறு தன் திருவுள்ளத்தை நோக்கி அருளிச் செய்கின்றார்.

இப்பாசுரத்தில் **'பிணியொன்றும் சாரா: பிறவி கெடுத்தருளும்'** என்ற பகுதியே நமக்கு வேண்டுவது.

**'பிணி ஒன்றும் சாரா'** - துன்பங்களில் ஒன்றும் நம்மைத் தீண்டாது. **'பிறவி கெடுத்து ஆளும்'** - அந்தத் துன்பங்களுக்கு அடிமையான பிறவியை வேரோடு போக்கி நம்மிடம் நித்திய கைங்கரியத்தைக் கொள்ளுபவன்.

இதே திருவாய் மொழியில் **மூன்றாம் பாசுரம்:**

(8). ஆள்கின்றாள் ஆழியான்; ஆரால் குறைவுஉடையம்?
மீள்கின்றது இல்லை; பிறவித் துயர்கடிந்தோம்;
வாள்கெண்டை ஒண்கண் மடப்பின்னை தன்கேள்வன்
தாள்கண்டு கொண்டு, என் தலைமேல் புனைந்தேனே (3)

(ஆழியான் - கையும் திருவாழியுமான பெருமான்; ஆள்கின்றான் - காத்தருளாநின்றான்; துயர் - துன்பம்; கடிந்தோம் - தொலையப் பெற்றோம்; மீள்கின்றது இல்லை - இனி சம்சார சம்பந்தம் மறுவலிடாது; ஆரால் - ஆரைக் கொண்டு; குறைஉடையம் - காரியம் உடையம்; வாள் - ஒளியையுடைய; ஒண்கண் - அழகிய கண்; கேள்வன் - நாயகன்; தாள் - திருவடிகள்; புனைந்தேனே - அணியப்பெற்றேனே)

மறுவலிடாதபடி பிறவிப்பிணியைப் போக்கி நப்பின்னைப் பிராட்டியின் கணவன்னானவனுடைய திருவடிகளைத் தலைக்கு அணியாகப் பெற்றதாகக் கூறுகின்றார்.

இப்பாசுரத்தில் **'பிறவித்துயர் கடிந்தோம்'** என்பது நமக்கு வேண்டிய பகுதி.

**பிறவித்துயர் கடிந்தோம்:** பிறவித்துன்பத்தை ஒட்டினோம். பரமபதத்தில் புக வாய்ப்பு பெற்றும், ருசி முன்னாகப் பேறு



இல்லாமையாலே கடலில்புக்க துரும்பு போலே மீளப் போந்தார்களன்றோ வைதிகன் பிள்ளைகள்? 'மயர்வற மதிநலம் அருளினன்' என்று ருசி முன்னாக அவன்தரப் பெற இருக்கின்ற நமக்கு மீண்டு வருதல் என்பது ஒன்று இல்லை என்றபடி. **'கடிந்தோம்'** என்கின்றார் காணும்; அவன் செய்வானாக ஏறிட்டுக் கொண்ட காரியத்திற்கு 'நிலையாகப் பெற்றேன்' என்ன வேண்டும்படி இருக்குமன்றோ?

இவ்விடத்தில் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின்,

தாளால் சகம்கொண்ட தாஅரங்கா!
பண்டு சாந்திபன்சொல்
கேளாக் கடல்புக்க சேயினை
மீட்டதும் கேதமுடன்
மாளாப் பதம்புக்க மைந்தனை
மீட்டதும் மாறலவே
மீளாப் பதம்புக்க பாலரை
நீயன்று மீட்பதற்கே (72)

என்ற திருவரங்கத்து மாலையின் செய்யுள் சிந்தித்தல் தகும்.

**'முனியே நான்முகனில்'** *(10.10)* 'மாயம்செய்யேல் என்னை; உன் திருமார்வத்து மாலைமங்கை, வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை; நின் ஆணை கண்டாய்' (2) என்று ஆணையிடும் அளவும் தொடர்ந்து சம்சாரத்தில் இருப்பை இப்போதே கடிந்ததாகச் சொல்லுகிறது நெஞ்சில் உண்டான தெளிவாலே என்க.

இத்திருவாய்மொழியில் **ஒன்பதாம் பாசுரம்:**

(9). கண்டேன் கமல மலர்ப்பாதம்; காண்டலுமே,
விண்டே ஒழிந்த வினையாயின எல்லாம்;
தொண்டேசெய்து, என்றும் தொழுது வழிஒழுக,
பண்டே பரமன் பணித்த பணிவகையே (10.1:9)

(தொண்டு - பரபக்தி; என்றும் தொழுது - நித்திய கைங்கரியம் செய்து; வழிஒழுக - அதுவே யாத்திரையாகச் சொல்லும்படி; பண்டே - முன்பே (கீதாசார்யனான அப்போதே); பரமன் - எம்பெருமான்; பணித்த - அருளிச்செய்த; பணிவகையே - வினையாயின எல்லாம் - விரோதி என்று பேர்பெற்றவை எல்லாம்; விண்டேஒழிந்த - வாசனையுடன் விட்டுப்போயின).

பல காலங்களில் சம்பாதிக்கப் பெற்ற பக்தியாலே அடையப்படுபவனை அவன்திருவருளாலே காணப்பெற்றதாக உரைக்கின்றார்.

இப்பாசுரத்தில் **"விண்டே ஒழிந்த வினையாயின எல்லாம்"** என்பதுவே நமக்கு வேண்டிய பகுதியாகும்.

''எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கின்றேன்'' (கீதை 18:66) என்கின்றபடியே அவன் அடியாக வருகிறதே அன்றோ? 'வினையாயின அடங்கலும்'. 'இவர்கேவலர் அல்லர், அடியிடையவராய் இருந்தார்' என்று விட்டுப்போயின. ''ணிச்சாலே, நீயும் வேண்டா நானும் வேண்டா, அவை தன்னடைவே விட்டுப்போம்?...'' (முமுட்சு. 255) என்ற ஸ்ரீசூக்தி இவ்விடத்திற்குச் சார்பாக அநுசந்திக்கத்தக்கது.

**'பக்தி பண்ணும் வகையைத் தொகுத்துக் கூறல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (10.5) **ஒன்பதாம் பாசுரம்.**

(10). அமரர்க் கரியானை-தமர்கட் கெளியானை
அமரத் தொழுவார்கட்கு-அமரா வினைகளே (9)

(அமரர்க்கு-தேவர்கட்கு; தமர்கட்கு - அடியவர்கட்கு; அமர - பலன் ஒன்றும் விரும்பாத; அமரா-கிட்டா)

'பிறவி தொடக்கமானவைகள் காரணங்கள் ஆகாமற் போனாலும் வேறுபயன்களைக் கருதுவதற்குக் காரணமான பாவங்கள் செய்வன ஏன்? என்னில்: ஒரு பயனையும் கருதாதவராய்ப் பற்றவே அவை தாமே போம்' என்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டியது **'அமரா வினைகளே'** என்பது. ''வேறு பயன்களை விரும்புவதற்கு அடியான தீவினைகள் வந்துகிட்டமாட்டா'' என்பது இதன் பொருள். அவை தொலைந்து போகும் என்பதாயிற்று.

**'தமக்குப் பேறு அளிக்கச் சமயம் பார்த்திருந்த பேரருளைப் பாராட்டி ஆழ்வார் நெஞ்சுடன் கூறுதல்'** என்பதை விளக்கும் திருவாய்மொழியில் (10.6) **பல சுருதிப் பாசுரம்.**

(11). காட்டித்தன் கனைகழல்கள் கடுநரகம் புகலொழித்த
வாட்டாற்றெம் பெருமானை வளங்குருகூர்ச் சடகோபன்
பாட்டாய தமிழ்மாலை ஆயிரத்துள் இப்பத்தும்
கேட்டுஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே (11)

(கனைகழல்கள் - திருவடிகள்; கடுநரகம் - கடுமையான சம்சாரநரகம்; செம் சொல் - செவ்விய சொல்; வானவர்கள் - நித்திய சூரிகள்; கேட்டு ஆரார்- கேட்டுமன நிறைவு பெறார்)

'இத்திருவாய் மொழியைக் கற்க உரியவர்கள் நித்திய சூரிகள்' என்கின்றார். நித்திய சூரிகள் இப்பாசுரங்களைக் கேட்பது எவ்விதம்? இங்கிருந்து போகும் முக்தர்கள் சொல்ல, அவர்களது வாய்வழியே கேட்க வேண்டும். ஆகவே இப்பதிகம் வல்லார் நித்திய சூரிகளைக் கேட்பிக்க வல்லவராவர் என்று பயனுரைத்ததாகவே ஆயிற்று.



இப்பாசுரத்தில் **''கடு நரகம் புகல் ஒழித்த''** என்பது நமக்கு வேண்டிய தொடர். **'கடுநரகம் புகல் ஒழித்த:'** ''பொய்ந்நின்ற ஞானமும்.... இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை'' (திருவிருத்.1) என்று முதலில் விரும்பியபடியே செய்து தலைக்கட்டினபடி. அறிவுடையார்க்குப் பொறுக்க முடியாதநரகம் இந்த உலக வாழ்வேயன்றோ? ஆழ்வார் இந்த நல்ல செய்தியை திருவாட்டாற்று எம்பெருமான் முகமாகப் பெற்றதனால் 'கடுநரகம் புகல் ஒழித்த வாட்டாற்றெம் பெருமானை' என்கின்றார்.

**'எம்பெருமானது அருள் திறத்தைப் பேசுதல்'** என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (10.8) **ஐந்தாம் பாசுரம்.**

(12). வானே தருவான் எனக்காய்என் னோடொட்டி
ஊனேய் குரும்பை இதனுள்புகுந்து இன்று
தானே தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்
தேனேய் பொழில்தென் திருப்பேர் நகரானே (5)

(தேனேய் - வண்டுகள் செறிந்த; பொழில் - சோலைகள்; வானே - திருநாடு; என்னோடு ஒட்டி - என்னோடு உறுதி சொல்லி; ஊன் - மாமிசம்; குரம்பை - சரீரம்; புகுந்து - வந்து புகுந்து; தடுமாற்ற - தன்னைப்பிரிந்து தடுமாறுகைக்கு அடியான; வினைகள் - புண்ணிய பாவங்கள்; தவிர்த்தான் - போக்கியருளினான்)

'திருப்பேர் நகரான் பரமபதத்தை எனக்குத் தருவதாகச் சபதம் செய்து விரோதிகளையும் போக்கியருளினான்' என்கின்றார்.

இப்பாசுரத்தில் ''தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்'' என்பது நமக்கு வேண்டிய பகுதி. ''தன் பக்கல் நின்றும் என்னைப் பிரித்துத் தடுமாறும்படி செய்யவல்ல பாவங்களைப் போக்கினான். அவையாவன: ''பொங்கு ஐம்புலனும் பொறிஐந்தும், கருமேந்திரியம், ஐம்பூதம், இங்கு இவ்வுயிர் ஏய் பிரகிருதி மான், ஆங்காரம், மனங்கள்'' (திருவாய். 10.7:10).

இதே திருவாய் மொழியில் **மூன்றாம் பாசுரம்:**

(13). பிடித்தேன்; பிறவி கெடுத்தேன்; பிணிசாரேன்;
மடித்தேன் மனைவாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை
கொடிக்கோ புரமாடங்கள் சூழ்திருப் பேரான்
அடிச்சேர்வது எனக்குஎளிது ஆயின வாறே (3)

(கொடி - கொடிகளாலும் மாடங்களாலும்; சூழ - சூழப்பெற்ற; அடி சேர்வது - திருவடிகளைச் சேர்வது; எளிது ஆயினவாறு - எளிதாயினவிதம்; கெடுத்தேன் - தொலையப் பெற்றேன்; சாரேன் - அணுகாவகை பெற்றேன்; மனைவாழ்க்கை - சம்சாரம்; மடித்தேன் - அழித்தேன்)

அவன் தம்முடைய காரணம் இல்லாமலே வந்து கலந்தபடியே நினைந்து, 'இவன் திருவடிகள் எனக்கு இங்ஙனம் எளிது ஆவதே!' என்கின்றார்.

இப்பாசுரத்தில் 'பிறவி கெடுத்தேன்' என்ற தொடர் நமக்கு வேண்டிய பகுதியாகும். "திறந்து கிடந்த வாசல்தோறும் நுழைந்துதிரியும் பிராணிபோலே இது வரையில் எத்தைனையோ யோனிகளில் நுழைந்து புறப்பட்ட யான் பிறவி இனி நேராதபடி செய்து கொண்டேன்" என்பது இதன் பொருள். 'கானோ ஒருங்கிற்று? கண்டிலமால்' (பெரி. திருவந் 54) என்கின்றபடியே, எங்கே போயிற்று என்பது தெரியவில்லை.

இதே திருவாய் மொழியில் **ஏழாம் பாசுரம்.**

(14). **உண்டு களித்தேற்கு உம்பர்என்குறை மேலைத்**
**தொண்டு உகளித்துஅந்தி தொழும்சொல்லுப் பெற்றேன்**
**வண்டு களிக்கும் பொழில்சூழ் திருப்பேரான்**
**கண்டு களிப்ப கண்ணுள்நின்று அகலானே (7)**

(களிக்கும் - மதுவைப்பருகிக்களிக்கும் படியான; பொழில் - சோலை; களிப்ப - நாள்தோறும் கண்டுகளிக்குமாறு; கண்ணுள்நின்று - கண்ணுக்கு இலக்காகிவிட்டு; அகலான் - பிரிந்திரா நின்றான்; களித்தேற்கு - மகிழ்ந்த எனக்கு; உம்பர் - மேலுலகத்தில்; மேலைத் தொண்டு - மேலான கைங்கரியம்; உகளித்து - அதிசயித்து; அந்தி - சரமதசை; சொல்லுப் பெற்றேன் - 'நம!' என்று சொல்லுகின்ற சொல்லைச் சொல்லவும் பெற்றேன்)

அவனுடைய ஆதரத்தால் தமக்குக்குறை இல்லாமையை அருளிச் செய்கின்றார்.

இப்பாசுரத்தில் நமக்கு வேண்டியது 'அந்தி தொழும் சொல்லுப் பெற்றேன்' என்பது. இதன் பொருள்: முமுட்சுப்படியில் 'அந்தித் தொழும் சொல் என் கையாலே பலம் சொல்லிற்று' (88) என்ற அருளிச் செய்தது இங்கு அநுசந்தேயம். கைங்கர்யத்தாலாய இன்பம் மிகுந்தால் அதனுடைய எல்லையான நிலைமையிலே சொல்லக் கூடியதான தொழும் சொல் - 'நமச்சப்தம்'. இதுதான் முடிவான பேறு; அதனையும் இங்குப் பெற்றேன் என்கின்றார். அதாவது, பிரீதி வழிந்த சொல்லாலே திருவாய்மொழிபாடி அடிமை செய்யப்பெறுவதைத் தெரிவித்தபடியாம்.

**'ஆழ்வார் பரம பக்தியால் கனிந்து, திருமாலைத் தாம் அடைந்தமையை அருளிச் செய்தல்'** என்பதை விளக்கும் திருவாய் மொழியில் (10.10) **பல சுருதிப் பாசுரம்.**

(15). அவாவறச் சூழ்அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவில்அந் தாதிகளால் இவையா யிரமும் முடிந்த
அவாஇல்அந் தாதிஇப் பத்துஅறிந் தார்பிறந் தார்உயர்ந்தே (11)

(அவாஅற - விரும்பம் தீரும்படி; சூழ - சேர்பவனாய்; அயனை - பிரமனுக்கு அந்தர்யாமியாய்; அரனை - சிவனுக்கும் எம்பெருமானாயிருக்கின்ற எம்பெருமானை; அலற்றி - கூப்பிட்டு; அவா அற்று - ஆசை தீர்ந்து; அவாவில் - பக்தியினால் உண்டானதான; முடிந்த அவாவில் - பரம பக்தியாலே பிறந்ததான; அறிந்தார் - அறியக் கற்பவர்கள்; பிறந்தார் உயர்ந்தார் - பிறவி எடுத்தாலும் உயர்ந்தவர்களாவர்)



பரபக்தி பரஞான பரமபக்தி நிலைகள் என்ற மூன்று உண்டல்லவா? 'சூழ்விசும் பணிமுகிலுக்கு' (10.9) முன்வரையில் பரபக்தி நிலையாகச் சென்றது. 'சூழ்விசும் பணிமுகில்' திருவாய் மொழியானது பரஞான நிலையில் சென்றது. 'முனியே நான் முகனே' (10.10) என்ற இத்திருவாய் மொழி பரமபக்தி நிலையில் சென்றது. பகவானுடைய திரு அருள் பாதியும் தாங்கள் பாதியுமாகச் சொல்லு கின்றவர்கட்கு சரீரத்தின் முடிவிலே இப்பரபக்தி முதலியவை உண்டாகும். இவர் தொடக்கத்திலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற வராகையாலே இவ்வுலகில் எழுந்தருளியிருக்கும் போதே இறைவன் திருவருள் துணை நிற்க அனைத்தும் உண்டாயின. பரமபக்திக்கே 'முடிந்த அவா' என்று பெயர். இப்படிப் பரமபக்தி பேசுவித்த இப்பதிகம் வல்லவர்கள் இவ்விருள்தருமா ஞாலத்தில் பிறந்திருந்தாலும் 'நித்தியசூரிகளிலே இவர்கள்' என்னும்படியான பெருமையுடன் பொலிவர் என்று பயன் உரைத்துத் தலைக்கட்டுகின்றார்.

இந்தப் பாசுரத்தில் 'அவாவற்று வீடு பெற்ற' என்ற தொடரே நமக்கு வேண்டியது. 'அலற்றி அவாஅற்று வீடுபெற்ற - கூப்பிட்டு அவனைப் பெற்று எல்லாத் தடைகளும் நீங்கியவர் ஆகையாலே துக்கம் இல்லாதவரும் அந்தமில் பேரின்பம் எய்தியவருமான ஆழ்வார் அருளிச் செய்த. இவருடைய அவா மைத்திரேய பகவான் தானத்திலே நிற்கிறதாயிற்று. தத்துவார்த்தங்களையெல்லாம் பராசர பகவான் விஷ்ணு புராணத்தில் மேலும் மேலும் விரிவாகக் கூறியது, மைத்திரேய பகவான் வினாக்கள் கேட்டபின்பு ஆகையாலே, அந்த மைத்திரேயதானத்திலே இங்கு பக்தி என்கின்றார். விஷ்ணு புராணத்திற்கு மைத்திரேய பகவான் காரணமானாற்போலே இந்தப் பிரபந்தத்திற்கும் ஆழ்வாருடைய பக்திமூலம் என்றபடி.

# 4. சம்சார சாம்ராஜ்யம்

இது பிள்ளை உலக ஆசிரியரின் பதினெட்டு இரகசியங்களுள் ஒன்று. இஃது ஒன்பதாவது இரகசியம். இவ்வுலக வாழ்க்கையைத் துன்பக் கடலாக உருவகித்துக் காட்டுவர் நம் முன்னோர். 'சம்சார சாகரம்' என்பது இதனைக் குறிக்கும் வட மொழித் தொடர். ஆண்டாள் நாச்சியார் 'கண்ணன் என்னும்' (13) என்ற திருமொழியின் பலசுருதிப் பாசுரத்தில்,

அல்லல் விளைத்த பெருமானை
ஆயர்பாடி அணிவிளக்கை
--------------------------------
விட்டு சித்தன் வியன் கோதை
--------------------------------
சொல்லைத் துதிக்க வல்லார்கள்
'துன்பக் கடலுள்' துவளாரே (10)

என்றவாறு வாழ்க்கையைத் 'துன்பக் கடல்' என்ற உருவகித்துள்ளதைக் காணலாம். நம்மாழ்வாரும், திருவாட்டாறு பற்றிய திருவாய் மொழியில் (10.6)

இருள்தருமா ஞாலத்துள்
இனிப்பிறவி யான்வேண்டேன் (1)

என்று முதற் பாசுரத்தில் இந்த உலகை 'இருள் தருமா ஞாலம்' என்று கூறியுள்ளதையும் நோக்கலாம். இந்த உலகம் இருக்க இருக்க அறிவின்மையைத் தருவதாயிற்று என்கின்றார். நித்திய சூரிகள் இங்குவந்தாலும் அவர்களையும் மருளச் செய்யும் இந்நிலம். நித்தியசூரிகளின் நாதன் இங்கு வந்தாலும் அவனும் இந்நிலையை அடைவான் என்கின்றார்.

ஐம்பெரும் பூங்களால் அமைந்த இந்த உடல் ஒன்பது வாயில்களையுடைய நகரமாக உருவகிக்கப்படுகிறது (கீதை 5:3). பிள்ளை உலக ஆசிரியர் இதனை 'ஒருபடைவீடு' என்று உருவகிக்கின்றார். திருமங்கையாழ்வார் இதனை 'ஒருகுடிசையாக' உருவகிக்கின்றார்.

ஊன்இடைச் சுவர்வைத்து, என்புதூண் நாட்டி
உரோமம்மேய்த்து ஒன்பது வாசல்
தான்உடைக் குரம்பை (பெரி.திரு 1.6.9)

என்ற நைமிசாரணியத் திருமொழிப் பாசுரத்தில் இதனைக் காணலாம். குடிசையின் இடையே சுவர்கள் வைக்கப் பெற்றிருக்கும். உடலில் தசைப் பிண்டங்கள் சுவர்கள் போலுள்ளன; குடிசையில் தூண்கள் நாட்டப் பெற்றிருக்கும்; உடலில் எலும்புகள் தூண்கள் போலுள்ளன. குடிசையில் பல வாயில்கள் உள்ளன; உடலில் ஒன்பது தொளைகள் உள்ளன[1]. குடிசை ஓலையால் வேயப் பெற்றிருக்கும்; உடலும் உரோமங்களால் மூடப் பெற்றுள்ளது. இவ்வகைகளால் ஒரு குடிசைபோல் உள்ளது உடல். குடிசையில் நாம் வாழ்வதுபோல் இவ்வுடலில் ஆன்மா வாழ்கின்றான். இவ்வுடலைவிட்டு ஆன்மா நீங்கும் காலமே 'மரணம்' என்பது.

உடலைப்பற்றி நம் முன்னோர் சிந்திருப்பதைத் தொகுத்துக் காட்டுவேன். நம் உடல் எண்சாண் நீளமும் ஒன்பது வாசல்களும் கொண்டது. எட்டுவித நீட்டெலும்பும், மூன்றுசாண் அளவுள்ள முதுகெலும்பும், எழுபது பேரெலும்பும் இரண்டாயிரம் துண்டெலும்பும் ஆயிரம் தொடர் எலும்பும் உடையது. இதில் எழுபத்தொரு மலக்குழிகளும் நாற்பது வெளிவாசல்களும் முப்பத்திரண்டு அவயவங்களும் எண்ணில் கோடி உதிர தாரைகளும் உள்ளன. இவைதவிர மூன்றரை கோடி மயிர்க்கால் ஓட்டைகளும், நூற்றெட்டு கோடி உரோமங்களும், ஏழுபத்தாயிரம் நரம்புகளும், எழுநூற்றுப் பதின்மூன்று பலசர்ம மாமிசக் குழிகளும், ஏழு தாதுக்களும், இரண்டுபடி வாதமும், மூன்றுபடி பித்தமும், நான்கு படி சிலேட்டுமமும், இரு கைகளும், இரு கால்களும், இருபது விரல்களும், ஒரு தலையும் உடையது நமது உடல்.

இந்த உடலில் அரசன் போன்று ஆன்மா கர்மம் ஒன்றும் செய்யாமல் 'சும்மா' இருக்கின்றது. அதனுடைய மந்திரி பிரதானிகளாகிய அகங்காரம், மனம், புத்தி, பிராணன், இந்திரியங்கள் முதலியன தொழில் புரிகின்றன. நுகர்வினை (பிராரப்தகருமம்) முடியும் வரை இங்ஙனம் செயல்கள் நடைபெறுகின்றன.

சம்சாரமாகிய காட்டில் புதர்கள் நிறைந்துள்ளன. ஆழ்வார் இவற்றைக் 'கொடுவினைதூறு' (திருவாய் 3.2:9) என்று வருணிப்பர். இந்தக் காட்டிற்குள் உள் புகுவதற்கு வழி தெரியும்; வெளிவர வழி தெரியாது.

இந்தக் காட்டினுள் அளவிறந்த துக்கத்திற்குக் கொள்கலமான மரம் உண்டு. அந்த மரத்தாலே வித்யை என்ற தேர் சமைக்கப் பெறுகின்றது. கருப்பம், பிறப்பு, பால்யம், யௌவனம், முதுமை, மரணம், நரகம்

1. கண்-2, காது-2, மூக்கு-2, வாய்-1, மலத்தொளை-1, சிறுநீர்த் தொளை-1. - ஆக ஒன்பது.



என்னும் அவத்தைகளாகிய உருளைகள் சேர்க்கப் பெறுகின்றன. இந்தத் தேரில் விருப்பு (ராகம்), வெறுப்பு (துவேஷம்), பிறர் சுகப்படுவதைக் கண்டு வருந்துவது (ஈரிஷை) போன்ற குதிரைகள் பூட்டப்பெறுகின்றன. சத்துவம், இராசசம், தாமசம் (குணத்திரயம்;) (திரயம்-மூன்று) என்னும் ஊஞ்சலின்மீது வைக்கப் பெறுகின்றது. இதன்மீது கர்மம் என்னும் சிங்காதனம் இடப்பெற்று ருசி என்னும் மேல்விரிப்பு விரிக்கப் பெறுகின்றது. இதில் அமர்ந்த சம்சாரியின் அருகில் அநுபவித்தே தீர வேண்டிய உறுபிணிகளான[2] மனைவி இனம் உள்ளனர்.

இவர்கள் என்ன செய்கின்றார்கள்? இருட்டாகின்ற விளக்கை ஏற்றுகின்றனர். பொருளல்லவர்களாகிய அடியார் கூட்டம் பரதோஷம், பரஹிம்சை, பரானுவர்த்தனம் தொடக்கமான இன்பங்களை ஊட்ட அவற்றை மனிதன் அநுபவிக்கின்றான். இதனால் சொரூப சுபாவங்கள் அவனிடம் பிரகாசிக்கப் பெறாது போகின்றன. அடுத்து வாசனை என்கின்ற 'வீரம்' இடம்பெறுகின்றது. அடுத்து தாபத்திரயம் (ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்) என்னும் விடாய்க் குடையின்கீழ் அமர்த்தப் பெறுகின்றான். அடுத்து பஞ்சவிருத்தி பிராணன்களாகின்ற புரோகிதர் அந்த சம்சாரியை சம்சாரத்துக்கு அரசனாக்குகின்றார். புகழ், இலாபம், பூசைகள் அவனை வந்தடை கின்றன. அவனுடைய புண்ணிய பாவங்களாகின்ற சாமரங்கள் அசைகின்றன. பல்வேறு வகையான துக்கபரம்பரைகள் தோத்திரங்கள் செய்கின்றன. 'யான்' 'எனது' என்கின்ற விசிறிகள் (ஆலவட்டங்கள்) வீசப்பெறுகின்றன. சதா துக்க மழைகள் அவனைச் சுற்றிச்சுற்றி வருகின்றன. நினைவின்மை என்ற அவனுடைய பண்பு ஆராதனத்தில் பயன்படுத்தப் பெறும் தீர்த்த வட்டிலைத் தாங்கி நிற்கின்றது. ஆசைமிகுதி (அபிநிவேசம்) படிக்கம் (எச்சில் துப்பும் கலம்) எடுக்கின்றது. உலகப்பொருள்களின் மீதுள்ள ருசி என்றபண்பு அடைப்பை (வெற்றிலை-பாக்கு பெட்டி) எடுக்கின்றது.

இந்நிலையில் முற்பிறவியில் செய்தனவும் இப்பிறவியில் செய்வனவுமான பாவங்களாகின்ற ஆனை குதிரைகளுடன் வாதம் பித்தம் சிலேஷ்மங்களாகின்ற அமைச்சர்கள் அவனைச் சேவித்து நிற்கின்றனர். இவர்களுடன் காமம் (எதையும் அநுபவித்தாலன்றித் தரியாத மனவிகாரம்) குரோதம் (ஒன்றைப் பெறாதபோது எழும் சினம்), உலோபம் (எவ்வளவு மிகுந்தவரிடம் பொறாமை கொள்ளுதல்) தொடக்கமான பிரபுக்களும் சேவிக்கின்றனர். மற்றும் இவர்களுடன் பகவத அபசாரம், பாகவத அபசாரம், பொறுக்க முடியாத அபசாரம், நானாவித அபசாரங்களாகின்ற காலாட்களும்; நித்திராதேவி, மூதேவி தொடக்கமான பெண் பிள்ளைகளும் சேவித்து நிற்கின்றனர்.

2.மனைவி இனம் -நெடுநாளாக இருந்துவரும் நோய்களாக வருணிக்கப் பெறுகின்றது. 'உற்ற உறுபிணி நோய்காள்' (பெரியாழ்.திரு.5.2:6)

இருந்தும் பிறர்க்கு உதவாமை), மோகம் (அறிவின்றி ஒன்றில் ம விருப்பம்), மதம் (செருக்கடைந்து யாவரிடத்தும் வணக்கம் அற்றிருத்தல்), மாத்சரியம் தன்னிலும் மிகுந்தவரிடம்.... அடுத்து, ஆசையாகின்ற பாசக் கயிற்றால் பிணைக்கப்பெற்று இந்திரியங்களாகின்ற மதக் களிறுகள் அத்தேரை இழுக்கின்றன. காலமாகின்ற சாரதி தேரை நடத்துகின்றது. தொடர்ந்து, 'தேகாத்மாபிமானி வந்தான்', 'சுவதந்திரன் வந்தான்', 'அந்நிய சேஷபூதன் வந்தான்' என்று காளங்கள் சின்னங்கள் பரிமாற,

மெல்லியல் ஆக்கைக் கிருமி
குருவில் மிளிர்தந்தாங்கே
செல்லிய செல்கைத் துலகைஎன்
காணும்? (திருவிருத். 48)

என்று **நம்மாழ்வார்** கூறியுள்ளது போல, அதாவது புண்ணிலே தோன்றி புழுவானது தான் தோன்றின இடமாகிய அப்புண்ணைத் தவிர வேறொன்றையும் அறியாதிருப்பது போல, தானும் தன் பரிசனங்களுமாக சுகம் அநுபவிக்கின்றான். இது தவிர,

யாதானும் ஓராக்கையில் புக்குஅங்கு
ஆப்புண்டும் ஆப்பவிழ்ந்தும்
மூதுஆவி யில்தடு மாறும்
உயிர் (திருவிருத். 95)

என்று **சடகோபர்** கூறியது போல, அதாவது ஆன்மாவானது அநாதி காலமாகவே ஊழ்வினைக்கு ஏற்ப யாதானும் ஓர் உடம்பினுள் புகுந்து அதில் வினை விலங்கால் கட்டுப்பட்டிருந்தும் அவ்வுடம்பின் தொடர்ச்சி நீங்கியும், சூக்கும உடம்பில் நின்று சுவர்க்க நரகங்களில் புகுந்தும் மீண்டும் புக்கபுக்க உடல்கள்தோறும் 'யான்', 'எனது', என்ற செருக்குகளை உண்டாக்கிக் கொண்டு தடுமாறுவதுபோல சம்சாரியான சேதநன்தன் சத்தைக்குத் தாரகனான சர்வேசுவரனை மறந்து 'மொய்த்த வல்வினையுள் நின்று' (திருமாலை-4) என்று **தொண்டரடிப் பொடிகள்** கூறியது போல, அதாவது, பாபராசிகள் கோடிக்கணக்காகச் சேர்ந்து தேன் கூட்டை ஈமொய்த்துக் கிடக்குமாப் போலே, மனம் வாக்கு காயம் என்ற முக்கரணங்களாலும் பாதகம், அதிபாதகம், மகாபாதகம் முதலானவற்றிலே பொழுது போக்கிக் கொண்டிருப்பான்.

இந்நிலையில் ஒரு காரணமும் பற்றாத எம்பெருமானின் கடைக்கண் நோக்கால் நன்மை பரம்பரை உண்டாகும். அதனால் தன்னைக் காத்துக் கொள்வதற்கு வழி காண்கின்றான். களை எடுக்கக் கொடுத்த கோலைக் கொண்டு கண்ணைக் கலக்கிக் கொள்ளுவாரைப் போல, நம்பக்கல் சேரக் கொடுத்த உடம்பைக் கொண்டு அகலுகைக்கு உறுப்பாக்குகிறான்.



'நோற்றேன் பல் பிறவி' (பெரி.திரு.1.9:8) என்று **திருமங்கை மன்னன்** கூறுவது போல, "ஒருபிறவியில் பல பிறவிக்கு வேண்டும் பாவங்களை சேகரித்துக் கொள்ளுகின்ற இவனை தம்பக்கலில் சேர்த்துக் கொள்ளும், விரகு ஏதோ?" என்று திருவுள்ளம் பற்றுவான் எம்பெருமான். அடுத்து வலவட்டத்திலே,

தூதுசெய் கண்கள்கொண்டு
ஒன்று பேசி (திருவாய் 9.9:9)

என்ற **சடகோபர்** வாக்குப்படி, அதாவது, தன் கருத்தினை அவர்கட்கு அறிவிக்கவல்லன திருக்கண்கள் என்றது, மனத்திலே உள்ள மறத்தாலே, "கிட்டக் கடவோம் அல்லோம்" என்று இருக்கின்ற பெண்களுடைய கால்களைச் சென்று பிடியாநிற்கும் கண்கள். எம்பெருமானுடைய திருக்கண்கள் அடியார்களை உய்விக்கும் முறையைக் காட்டுகின்றன.

கருதும் இடம் பொருது (திருவாய் 10.6:8)

திருவுள்ளம் நினைத்த விடத்தே சென்றுபோரை நடத்தும் சக்கரத்தாழ் வானும் தன் ஏவலாளரை ஏவி விடுகின்றான்.

நின்றிவ் வுலகில் கடிவான்
நேமிப் பிரான்தமர் போந்தார் (திருவாய் 5.2:6)

என்றவாறு சக்கரபாணியான எம்பெருமானின் பக்தர்கள் போந்தார்கள்; கையும் திருவாழியுமான அழகிலே தோற்றிருக்குமவர்கள் வந்தார்கள். 'நேமிப்பிரான்தமர்' என் கையாலே திருவாழியாழ்வான் பகைவர்களைப் படுத்துகின்றபாடு இவர்களும் படுத்துவல்லவர்கள் என்பது தெளிவுறும். அவர்கள் வந்து என்ன செய்வார்கள்?

...என் பெருவினையைக்
கிட்டிக் கிழங்கொடு தன்னருள்
என்னும்ஒள் வாள்உருவி
வெட்டிக் களைந்த - (*இராம. நூற்.93*)

என்றவாறு தம்முடைய கிருபையாகின்ற அழகிய வாளை உறையில் நின்றும் கழற்றி எனது மகாபாவங்களை ஆணிவேர் பக்கவேர்களுடன் அறுத் தொழித்து விடுவார்கள். இன்னும்,

அடைந்த அருவினையோடு அல்லல்நோய் பாவம்
மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் - நுடங்கிடையை
முன்னிலங்கை வைத்தான் முரண்அழிய முன்னொருநாள்
தன்வில்அங்கை வைத்தான் சரண் (முத.திருவந்.59)

(அடைந்த - அடியைப் பிடித்துக் கொண்டு கிடக்கின்ற; அருவினை - போக்குவதற்கு அரிய பழவினைகள்; அல்லல் - மனத்துன்பங்கள்; பாவம் -

இப்போது செய்கின்ற பாவங்கள்; மிடைந்தவை - ஆன்மாவை மூடிக்கிடக்கின்றவை; மீண்டு ஒழிய வேண்டில் - வாசனையோடு விட்டு நீங்க வேண்டுமானால்; நுடங்கு இடை - மெல்லிய இடை; முரண் - மிடுக்கு)

என்று பொய்கையாழ்வார் கூறியுள்ளவாறு அருவினை அல்லல், நோய், பாவம் முதலிய அனைத்தையும் போக்கிவிடுவார்கள். அன்றியும் இவர்கள் அந்த சம்சாரிக்கு ஞானத்தையும் கொடுப்பார்கள். இதனால்,

தெரிந்துணர்வொன் றின்மையால் தீவினையேன் வாளா
இருந்தொழிந்தேன் கீழ்நாள்கள் எல்லாம் - கரந்துருவில்
அம்மானை அந்நான்று பின்தொடர்ந்து ஆழியங்கை
அம்மானை யேத்தாது அயர்த்து *(பெரி.திருவந்-82)*

(தெரிந்த உணர்வு - விவேகம், தீவினையேன் - மகாபாவியான்நான்; வாளா - வீணா கீழ்க்கழிந்தநாட்கள் எல்லாம்; கரந்த - மறைத்துக் கொண்டு; அம்மானை-மாரீசமானை; அந்நான்று - முன்பொருகாலத்தில்; ஆழி அம்கை - அறுகாழி மோதிரத்தை அழகிய திருக்கையில் அணிந்த; அம்மானை - இராமபிரானை; ஏத்தாது - துதிக்காமல்; அயர்த்து - அறிவு கெட்டு)

என்று **நம்மாழ்வார்** கூறியுள்ளபடி கழிந்த நாட்களுக்கு மிகவும் வருந்தி அடைய வேண்டிய பொருளை உள்ளபடி அறிவித்த ஆசாரியன் பக்கல் நன்றியுடையவனாய் விரோதி வர்க்கத்தில் வெறுப்புடையவன் ஆகிறான்.

இந்நிலையில் சம்சாரிக்கு திருமகள் கேள்வனைக் கிட்டியல்லது தரிக்க வொண்ணாத காதல் விளைகின்றது. இவ்வளவு குற்றங்களையும் பொறுத்து இவனை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பெரிய பிராட்டியார் புருஷகாரம் செய்ய, அவ்வளவும் பொறுக்கமாட்டாத படியான வாத்சல்யம், சுவாமித்துவம், சௌலப்பியம், சௌசீல்யம், ஞானம், சக்தி ஆகிய குணங்கள் தலையெடுத்து சேதநனை ஆட்கொள்ளச் செய்யும். இதனால் சம்சாரி எம்பெருமானுக்கு நித்திய கைங்கரியம் புரியும் பேற்றினைப் பெறுவான்.

# 5. நவரத்தின மாலை

## (பத்தாவது இரகசியம்)

# 5. நவரத்தினமாலை

இது பிள்ளை உலக ஆசிரியரின் பதினெட்டு இரகசியங்களுள் ஒன்று. பத்தாவது இரகசியம்). சரணாகதி நெறியைக் கடைப்பித்தவன் ஒன்பது விதமான நினைவுகளைக் கொண்டவன். அந்த நினைவுகளாவன:

(1) தன்னைப்பற்றிய (ஆன்மாவைப் பற்றிய) நினைவுகள்;

(2) தனக்கு விரோதியான (ஆன்மாவுக்கு விரோதியான) உடலைப் பற்றிய நினைவுகள்;

(3) உடலைப்பற்றி வரும் உறவினரைப் பற்றிய நினைவுகள்;

(4) சம்சாரிகளைப்பற்றிய நினைவுகள்;

(5) தேவதாந்தரங்களைப் (பிற தெய்வங்களைப்) பற்றிய நினைவுகள்;

(6) சிரீவைணவர்களைப்பற்றிய நினைவுகள்;

(7) தன் ஆசாரியனைப் பற்றிய நினைவுகள்;

(8) பிராட்டியைப்பற்றிய நினைவுகள்;

(9) ஈசுவரனைப்பற்றிய நினைவுகள்;

என்பவை. இந்த ஒன்பது வகை நினைவுகளைப் பற்றி நுவலும் நூலாதலால் இது 'நவரத்தின மாலை' என்ற திருநாமம் பெற்றது.

**(1). தன்னைப் (ஆன்மாவைப்) பற்றியவை:** தான் நித்தியன்; அணு அளவானவன். ஞானத்தையும் ஆனந்தத்தையும் வடிவாக உடையவன். ஞான ஆனந்தங்கட்கு இருப்பிடமானவன். எம்பெருமானையொழிய வேறொன்று நினைத்தல், சொல்லுதல் செய்யமாட்டாமல் எம்பெருமானுக்கே உரியவன். தன் காரியத்திற்குத் தான் கடவன் அல்லாதவன். அவனையே பலனாக அடையத்தக்கவன். இவ்வகை நினைவுகளையுடையவன் சேதநனான தான்.

1. **'நவரத்தின மாலை'** என்ற பெயரில் வேதாந்த தேசிகரால் அருளிச் செய்யப் பெற்ற பிரபந்தம் ஒன்று உண்டு. ஆனால் சுவாமி தேசிகன் தாமே பெயரிட்டுக் கொடுத்தபடி அது **'நவமணி மாலை'** என்ற பெயரால் வழங்கி வருகின்றது. இது திருவயிந்திரபுரத்து எம்பெருமானைப் பற்றியது. இஃது ஒன்பது வகையான செய்யுட்களால் ஆக்கப் பெற்றதால் இதற்கு **'நவமணி மாலை'** என்ற திருநாமம் இடப்பெற்றது. (தே.பி. காண்க)

**(2). உடல் பற்றியவை:** உடல் தன்னை உள்ளபடி உணர வெட்டாதது. மாறான அறிவைப் பிறப்பிப்பது. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற புலன்கள் **ஐந்து**; இவற்றிலே அகப்படுத்துகைக்கு உறுப்புகளான மெய் வாய் கண் மூக்கு செவி என்ற அறிவுப் பொறிகள் (ஞானேந்திரியங்கள்) **ஐந்து**; வாக்கு, கால், கை, எருவாய், கருவாய் என்ற செயற் பொறிகள் (கன்மேந்திரியங்கள்) **ஐந்து**; நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் என்ற பூதங்கள் **ஐந்து**; ஆக இருபதும், சம்சார தசையில் உயிரோடு பொருந்தியிருக்கின்ற **மூலப் பிரகிருதி**, வியாபகத்திற்குக் காரணமான **மகாந்**, அபிமானத்திற்குக் காரணமான **அகங்காரம்**, சங்கல்பத்திற்கு ஏதுவான **மனம்** ஆக இவை **நான்கு**. இந்த **இருபத்து நான்கு** தத்துவங்களின் திரளே உடல். இது நிலைஇல்லாதது. எப்பொழுதும் மாறுத் தன்மையுடையது. ஞான சூனியமுடையது. அளவற்ற துன்பங்கட்கு விளைநிலமாய் இருப்பது. புலன் உணர்வுகளை மூட்டி அழிக்கும் தன்மையுடையதாய் இருப்பது. இவை உடலைப் பற்றிய சிந்தனைகள்.

**மேலும் உடல் பற்றிய சிந்தனை யோட்டம்:** ஐந்து பூதங்களால் ஆனது உடல். ''பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற வீக்கம்[2]'' என்று இதனைக் கருதுவர் கம்பர் பெருமான். இந்திய தத்துவ தரிசனத்தின்படி அறிவுப் பொறிகள் ஐந்தின் வாயிலாக உலகம் பொருள்படுத்தப் பெறுகின்றது. இந்த ஐந்து பொறிகளாலன்றி உலகம் புலனாகாது (இதனை அறிவது உயிர்).

> சுவை ஒளி ஊறுஓசை நாற்றம் என்(று) ஐந்தின்
> வகைதெறிவான் கட்டே உலகு[3] (27)

என்பது வள்ளுவம். நா சுவைக்கின்றது. சுவைக்க மூல காரணம் அப்பு (நீர்). கண் உருவத்தைப் பார்க்கின்றது. ஒளிக்கு ஏதுவாயிருப்பது தீ (அல்லது தேஜஸ்). உடல் உணர்கின்றது. ஊறுவதற்கு (உணர்வதற்கு) ஏதுவாயிருப்பது வாயு (காற்று). காது கேட்கின்றது. ஓசைக்கு ஏதுவாயிருப்பது ஆகாயம் (வான்). மூக்கு நாற்றத்தை முகர்கின்றது. நாற்றத்திற்குக் காரணம் பிருதிவி(மண்-நிலம்). ஆக உலகாக அறிவதற்கு மூலப் பொருள்கள் (Elements) ஐந்தாம்.

இந்த ஐந்து பூதங்களும் சூக்குமம், தூலம் என்ற இரண்டு நிலைகளில் உள்ளன. சூக்கும பூதங்கள் தூல பூதங்களாக வடிவெடுப் பதற்கு ஒரு கணக்கு முறை உள்ளது. சூக்கும பூதம் ஒவ்வொன்றும் இரண்டு சமபாகங்களாகப் பிரிகின்றது. ஒருபாதிதன்னுடைய தூல அமைப்பில் நின்றுவிடுகின்றது. மற்றபாதி நான்கு அரைக்கால்ஆகிய ஏனைய நான்கு பூதங்களுக்குச் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கப் படுகின்றது. இது அடியிற் கண்டவாறு அமைகின்றது.

2. கம்பரா. சுந்தரகாண்டம் - காப்பு.

3.குறள்-நீத்தார்பெருமை-7(27).



| ஆகாயம் (வான்) | வாயு (காற்று) |
|---|---|
| 1/2+1/8+1/8+1/8+1/8 | 1/2+1/8+1/8+1/8+1/8 |
| **தேயு (தேஜஸ்)** | **அப்பு (நீர்)** |
| 1/2+1/8+1/8+1/8+1/8 | 1/2+1/8+1/8+1/8+1/8 |

**பிருதிவி (மண் - நிலம்)**

1/2+1/8+1/8+1/8+1/8

1/2 சூக்கும ஆகாயம்

1/8 வாயு

தூல ஆகாசம் =1 1/8 நெருப்பு

1/8 அப்பு

1/8 பிருதிவி

இங்ஙனம் சூக்கும பூதங்கள் தூலமாகி மாறுவதைப் 'பஞ்சீகரணம்' என்று வழங்குவர். சூக்கும பூதங்கள் சூக்கும உடலா கவும் (நுண்ணுடலாகவும்), தூலபூதங்கள் உடலாகவும் மாறுவதாகக் கருதலாம். பஞ்சீகரணப் பரிணாமமே இந்த உடல். தூல பூதங்கள் வினைப்பயன்களைத் துய்ப்பதற்குக் கருவி. உடலைவிட்டு உயிர் பிரிந்த அளவில் காண்பதற்கும் தொடுவதற்கும் தகுதி இல்லாத அழுக்கின்திரட்சி. அவரவர் செய்த வினைப்பயனுக்கு ஏற்ப எடுக்கும் ஒவ்வொரு பிறப்பின் இறுதியிலும், முன் உடலைவிட்டு மற்றொருபுத்துடலில் புகுவது நுண்ணுடல். இப்படியே வீடுபேறு அடையும் வரை பிறவியில் சுழன்று உழல்வது அது.

**(3). உறவினர்கள்:** ஆன்ம ஞானத்தையும், பகவத் ஞானத்தையும், பகவத் விஷயத்தில் ருசியையும், அதனை அடைவதில் வேகத்தையும் குலைத்து உடல்பற்றையும், 'யான்', 'எனது' என்ற அக, புறப்பற்றுகளையும் காமம், குரோதம் முதலியவற்றையும் விளைப்பித்து, பலபடியாலும் அநர்த்தத்தைப் பற்றி வரும் உறவினர்களைப் பற்றியே நினைவுகள் எழும்.

**(4). சம்சாரிகள்:** இவர்கள் உலகியல் அவாவில் கட்டுப்பட்டு உழல்பவர்கள். இவர்கள் பத்தர் (தலைப்பட்டிருப்பவர்) என்று வழங்கப்படுவர்[4]. 'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய'

4. சைவ சித்தாந்தம் இவர்களைப் 'பெத்தர்கள்' என்று குறிப்பிடும்.

பகவானின்மாயையால் மறைக்கப்பெற்ற சொரூபத்தை உடையவராய் அநாதி அஞ்ஞானத்தால் தேடிய புண்ணிய பாவமாகிய வினைகளால்

சூழப்பெற்றவராய், அவரவருடைய வினைக்குத் தக்கபடி மாறிமாறித் தேவ, மனித, விலங்கு, தாவர வடிவங்களைப் பெற்று, துக்க பரம் பரைகளை அநுபவிப்பவர்கள் இவர்கள். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய புலன் இன்பங்களில் ஆழ்தற்கு ஏதுவான உடலை வளர்ப்பதே தமது கடமை என மயங்குபவர்கள். புலன் இன்பங்கட்காகத் தமது குலக்கடமைகளைக் கைவிடுவர். இவர்களை,

பண்டிப் பெரும்பதியை யாக்கி பழிபாவம்
கொண்டிங்கு வாழ்வார் [5]

என்று குறிப்பிடுவர் **பூதத்** தாழ்வார். பகவதநுபவத்திற்கும் பகவத் கைங்கரியத்திற்கும் விரோதிகளாய் உலகியலில் விருப்பமுள்ளவராய் இருப்பவர்கள். உயிருக்கு வேறு ஆகிய உடலையே **'தான்'** என்றும், உடல் தொடர்பான பொருள்களைத் **'தமது'** என்றும் மாறுபட உணர்பவர்கள். இத்தகைய நினைவோட்டம் உள்ளவர்கள் என்று இவர்களைப் பற்றிய நினைவுகள் எழும்.

(5). **தேவதாந்தரங்கள்:** அஞ்ஞானம் உடையவர்கள். ஆற்ற லற்றவர்கள். எம்பெருமான் பக்கல் பிறந்து அவன் கொடுத்த பதங்களை யுடையவர்கள். அவனோடு எதிரிட்டு நிற்கும் துர்மானிகள். தங்களை மிகவும் பூரணராய் எண்ணி நாட்டாரை மயக்கி அநர்த்தத்தைப் புரிபவ ராயுமுள்ள சிலர் என்பன போன்ற எண்ணங்கள் இவர்களைப் பற்றி எழும்.

(6). ***ஸ்ரீவைணவர்கள்:*** பகவத்ஞானம், இதர விஷய வைராக்கியம், பகவத் பக்தி ஆகியவற்றை வளர்ப்பவர்கள். சிற்றின்பத்தைத் துச்சமெனக் கருதி ஒன்றையும் விரும்பாமல் அவன் இணைத் தாமரையடிகளை அடைவதேயே பலனாகக் கருதி பக்தியை உபாயமாக எண்ணி இருப்பவர்கள். தூயமனத்தடன் சாதன அறிவின்றிப் பக்தியுடையவராக இருப்பவர்கள். சேஷிகளாய், உசாத் துணையாய், பேற்றுக்கு எல்லை நிலமாயும் இருப்பவர். இவ்வாறு இவர்களைப் பற்றிய நினைவுகள் எழும்.

(7). **ஆசாரியன்:** 'தன் கடைக்கண் நோக்கால் அடியேனைத் திருத்திப் பணிகொண்டவன்'; சர்வேசுவரனின் அங்கீகாரத்திற்கு ஏற்ப யோக்கியனாம்படி பண்ணி அவன் திருவடிகளிலே சேர்ப்பிப்பவன்; அறியாதனவற்றை அறிவித்து[6] உய்விப்பன்; சுவாமியாய், என்றும் அடிமை கொள்பவனாயுமுள்ள மகோபகாரகன் போன்ற ஆசாரியனைப் பற்றிய நினைவுகள்.

5.இரண்.திருவந்.14 6.திருவாய் 2.3:2.



(8). **பிராட்டி:** நம்முடைய எல்லாக் குற்றங்களையும் பொறுப்பிப்பவள்; ஈசுவரனின் சுதந்திரத்தையும் குலைப்பவள்; அவனுடைய காருண்யம், வாத்சல்யம் முதலிய குணங்கள் கிளம்பச் செய்பவள்; நமக்குப் புருஷகார பூதையாய், மாதாவாய், சுவாமிநியாய், அடைவிப்பளாய் இருப்பவள். ஈசுவரனை அழகாலும் நம்மை அருளாலும் திருத்துபவள் - என்றவாறு பிராட்டியைப் பற்றிய நினைவுகள் எழும்.

(9). **சர்வேசுவரன்:** படைப்புக் காலத்தில் உடம்பையும் இந்திரியங்களையும் நல்கி வெறுப்பின்மை, அவனுடன் அன்பாக இருத்தல், நல்லோர் கூட்டுறவு முதலிய ஆன்ம குணங்களை யுண்டாக் கினவன். நல்லாசிரியனுடன் நம்மைச் சேர்ப்பிப்பவன். நமது குற்றங்களையெல்லாம் பொறுப்பவன். சரணம் என்று தன்தாள் அடைந்தவர்க்கு வசப்படுவன்; உலகம் யாவையும் ஆக்குபவன்; நிலை பெறுத்துபவன்; நீக்குபவன்; இவற்றை அலகிலா விளையாட்டாகக் கொள்பவன். இத்தகைய எம்பெருமான் அந்தர்யாமியாய் இருந்து, சத்தையே நோக்கி, அர்ச்சிராதி மூலமாய் சேண் விசும்பில் சேர்ப்பித்து நமக்குப் பரமபதத்தையும் தந்து, அடிமையாக ஆதரித்து நித்திய கைங்கரியம் கொள்ளும் அண்ணல் என்பன போன்ற நினைவுகள் சர்வேசுவரனைப் பற்றி எழும்.




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

# ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

**1) Tamil Payitrum Murai [1957]**
**2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
**3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
**4) Vainava Selvam [1995]**



## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21
b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

## *Research on Professor's Books*

**a) University of Madras - 1993 (leading to PhD)**
**b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)**
**c) Bharathiyar University - 2019 (leading to PhD)**

## *Research Study*

Students/Scholars [doing MA/MEd/MPhil] are conducting research study based on Professor's Books. Na Subbu Reddiar 100 Educational Trust is offering Fellowships to these students.

**ISBN: 978-81-945046-0-3**




www.nasubbureddiar100.in